

**Arthi**
வாஷ்-அண்ட் வியர் 2 x 2 வாயில்கள்

**Lavanya**
வாஷ் அண்ட் வியர் 2 x 2 கேம்ப்ரிக்

**Suchitra**
ஜெரச். டி. வாயில்கள்

**Sharmila**
செமி ஃபுல் வாயில்கள்

**Pushpanjali**
வாஷ் அண்ட் வியர் டைட் கேம்ப்ரிக் வாயில்கள்

# தாவண்கெரே
துணிவகைகள்

ஸ்ரீ தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்

Thomas/DCM/10 d Tam

என்றும் காணாத இன்பக் காட்சிகள்!

ஷர்மிலா டாகூர்

பாம்பே டையிங்

புடவைகளிலே



# பாம்பே டையிங்

BD-6415

அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?

கண்ணு, நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்



ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், தினுசுகளில், டப்பாக்களில் கிடைக்கின்றன.

பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லி.

CHAITRA-BLS-6 TAM



# கல்கி

பொருளடக்கம்

பிரமாதீச. புரட்டாசி 7 — செப். 23. 1973

அடையாள வேலைநிறுத்தம்... (தலையங்கம்) — 11
தமிழ் நாட்டிலே.... — 13
வடகோடியில் காமகோடி — 16
அருள்வாக்கு — 19
தெய்வ தரிசனம் — 20
சிவகாமியின் சபதம் — 27
ராஜாஜியின் ஜெயில் டைரி — 35
இடைவெளிக்கு ஒரு பாலம் — 36
மடப்பள்ளி மாப்பிள்ளை — 43
வாக்குறுதி — 49
ஞானக் குயில் — 51
நல்ல அம்மா, நல்ல அப்பா — 60
மனம் திருந்தினேன் — 65
இன்ஸ்பெக்டர் விக்ரம் — 69
எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட் — 70
வீட்டுக்கு வந்த மருமகள் — 72







''எங்கள் பள்ளிக்கூட டிரெஸ், வெள்ளை வெளேரென்று இருக்கணுமுன்னு எங்கள் டீச்சர் சொன்னாங்க-அதனாலேதான் எங்கம்மா எப்போதும் ராபின் ப்ளூவை உபயோகிக்கிறாங்க.''

ரோனியின் பிரிய பொழுதுபோக்கு.
ஸ்டாம்பு சேகரிப்பு



லட்சக் கணக்கான தாய்மார்கள் பள்ளி செல்லும் தங்கள் குழந்தைகளுக்கு அவ்விதமே செய்கின்றனர்.




வெள்ளைத் துணி-உடைகளை, சோப்பு அல்லது சுத்தமாக்கிகள்கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும்; ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை. ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

வெள்ளைத்துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குகின்றது

ARBC-35 TAM

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்



மலர் 33 — இதழ் 8

# அடையாள வேலைநிறுத்தம் அறிவிப்பது என்ன?

சென்ற 13ந் தேதி நடத்தப்பட்ட தமிழ்நாடு பொது வேலைநிறுத்தம் (பந்த்) வெற்றியா, தோல்வியா என்பது யார் அபிப்பிராயம் சொல்லுகிறார்கள் என்பதைப் பொறுத்தது. முதல்வர், 'தோல்விதான், மக்கள் ஆதரவு இல்லை' என்றுதான் சொல்வார். கிளர்ச்சிக்கு ஏற்பாடு செய்தவர்களைக் கேட்டால், ஈழு வெற்றி, மக்களின் ஆதரவு எதிர்பார்த்ததை விட அதிகமாகவே கிடைத்தது என்பார்கள். உண்மையை இதற்கிடையில்தான் காண வேண்டும்.

இரண்டு உண்மைகள் தெளிவாகவே தெரிகின்றன. சுமார் 6500 பேர்களை முன்னெச்சரிக்கை நடவடிக்கை என்ற பெயரில் முந்திய இரவு கைது செய்தது குறித்து மாநில அரசைப் பாராட்ட முடியாது. இவர்கள் அனைவரும் எந்த விதமான குற்றமும் செய்யாதவர்கள். சட்ட விரோதமான அல்லது பலாத்கார நடவடிக்கைகளில் இவர்கள் ஈடுபடக் கூடும் என்ற அநுமானத்தினுலேயே கைது செய்யப்பட்டவர்கள். இது நியாயத்துக்கும் நேர்மைக்கும் ஒவ்வாதது. குற்றம் செய்யாதவர்களைக் குற்றவாளிகள் போலவே கருதி அவ்விதமே அவர்களை நடத்துவது முறையல்ல. போலீஸ் படை முழுவதும் திரட்டப்பட்டு, அமைதி காக்கும் பணியில் ஏவப்பட்டுள்ள நிலைமையில் இத்தகைய பெருவாரியான தடுப்பு நடவடிக்கை ஆளும் கட்சிக்கே தங்களுடைய செல்வாக்கின் மீது நம்பிக்கை இல்லை என்பதைத்தான் காட்டுகிறது. பொது வேலைநிறுத்தம் எந்த நோக்கத்துடன் அறிவிக்கப்பட்டதோ, அந்த நோக்கம் ஓரளவுக்கு 6500 பேர்கள் கைது செய்யப்பட்டதன் மூலம் ஈடேறிவிட்டதாகக் கூடக் கருதிவிடலாம். 6500 பேர்களுடன் மேலும் நாலு அல்லது ஐந்தாயிரம் பேர்கள் கைது செய்யப் பட்டிருந்தால், வேலைநிறுத்தமே நடைபெறுமல் கூடச் செய்திருக்கக் கூடும். ஆனால் அது அப்பட்டமான போலீஸ் ராஜ்யமாகத்தான் ஆகும். ஆக, இந்நடவடிக்கை ஆளும் கட்சியின் கௌரவத்தைச் சிறிதும் உயர்த்தவில்லை. அடுத்த தேர்தலில் 6500 பேர்கள் அரசுக்கு எதிராகத் தங்கள் ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்ளத் தயாராக இருப்பார்கள் என்பது நிச்சயம்.

வேலைநிறுத்தத்துக்கு ஏற்பாடு செய்தவர்கள் உணர வேண்டியதையும் இந்தக் கிளர்ச்சி வலியுறுத்திக் காட்டுகிறது. விலைவாசி உயர்வுக்குக் கண்டனம் தெரிவிக்கும் வகையில் மேற்கொள்ளப்பட்ட இந்த நடவடிக்கையினுல் விலைவாசிகள் குறைந்துவிடப் போவதில்லை. அரசும் புதிய நடவடிக்கை என்று எதையும் மேற்கொள்ளத் தயாராக இருப்பதாகத் தெரியவில்லை. விற்பனை வரிச் சலுகை, கொள்முதல் நடவடிக்கை, நேர்மையான விநியோகம் — இப்படி சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவற்றின் மூலம் விலைவாசிகள் எவ்வளவு குறைந்துள்ளன என்பது சந்தேகம்.

விலைகள் குறைவதற்குப் பண்டிதர்களும் பாமரர்களும் ஒப்புக் கொள்ளும் வழி ஒன்றுதான் — உற்பத்தியை எல்லா வகையிலும், எல்லாத் துறைகளிலும் அதிகரிக்கச் செய்வதும், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் தட்டுத் தடங்கலின்றி விநியோகத்துக்கு வரும்படி செய்வதுமேயாகும். பொது வேலைநிறுத்தங்களினுல் உற்பத்தி தடைப்படுகிறதே தவிர, பெருகுவதில்லை. அடையாள வேலைநிறுத்தமானாலும், நீண்டகால வேலைநிறுத்தமானாலும், அந்தக் காலத்துக்கும் அதற்கு முன்னும் பின்னும் உற்பத்தி குறைவது வெளிப்படை. தமிழ் நாடு மாநிலத்தில் ஒரு நாள் வேலைநிறுத்தம் ஏற்பட்டால், குறைந்தது பத்துப் பன்னிரண்டு கோடி ரூபாய் பெறுமான உற்பத்தி தடைப்படுகிறது. இதனுல் மக்களுக்கு நஷ்டம்தானே ஒழிய வேறு உருப்படியான பலன் ஏதுமில்லை.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## சிறுபிள்ளைத்தனமான பேச்சு

"முதலமைச்சர் கருணாநிதி விரும்பியிருந்தால் வெள்ளிங்டன் மூலம் அமெரிக்காவுடன் கலந்து பேசி ஏழாவது கடற்படை வங்கக் கடலில் இருந்தபோது தமிழகத்தையும் பங்களா தேஷ் போல ஒரு தனி நாடாக மலரச் செய்திருக்க முடியும். அப்படிச் செய்யாமல் இன்னும் இந்திய மண்ணுடன் இணைந்திருப்பதே கலைஞர் காட்டும் பெருந்தன்மை அல்லவா?" என்பது போன்ற அர்த்தத்தில் சில தி. மு. க. சட்டமன்ற உறுப்பினரும், பிரமுகர்களும் எங்கெங்கோ பகிரங்கமாகக் கூட்டங்களில் பேசுவதாகப் பத்திரிகைகளில் வரும் செய்திகள் உண்மையாயிருக்குமானால் அந்தப் பேச்சை விடச் சிறுபிள்ளைத்தனமான காரியம் வேறெதுவும் இருக்க முடியாது. இப்படிப் பொறுப்பில்லாத பேச்சுக்களை யாராவது பகிரங்கமாகப் பேசினால் அவர்களை அந்தக் கட்சித் தலைமையாவது உடனே முன்வந்து கண்டிக்க வேண்டும், அல்லது கட்டுப்பாடு செய்து உளறல்களைத் தடுக்க வேண்டும். கட்சியின் தலைவரோ தாங்கள் கேட்கும் மாநில சுயாட்சிக்குக் கூறும் விளக்கத்திலேயே "இது பிரிவினை அல்ல" என்று வாய்க்கு வாய் சொல்லிக் கொண்டிருக்கிறார். மற்றொரு பக்கம் கட்சியின் ஆட்கள் 'இரண்டாவது குடியரசு', 'தனி நாடு' என்று தோன்றியபடி யெல்லாம் பேசி வருகிறார்கள்.

## இங்கிதக் குறைவான ஒரு சர்ச்சை

பிரதமர் இந்திரா காந்தியின் தமிழக விஜயத்தின்போது அவர் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகள் பத்திரிகைகளிலே பிரசுரமாகியுள்ளன. 'உயர்நீதி மன்றத்தில் மோகன் குமாரமங்கலத்தின் படத்தை அவர் திறந்து வைப்பார்' என்றும் ஒரு செய்தி வெளியானபோது பல வழக்கறிஞர்கள் திகைத்தனர். திரு மோகன் குமாரமங்கலம் ஒரு சிறந்த வழக்கறிஞர் என்பதை அனைவரும் ஏற்றாலும் நீதிபதிகளின் படங்களைத் தவிர வேறு படங்களை இதுவரை வைக்காத நீதிமன்றத்தில் காலஞ்சென்ற மோகனின் படத்தை எப்படி வைக்க முடியும் என்பது பற்றி ஒரு சர்ச்சை கிளம்பிவிட்டது. மிகச் சிறந்த வழக்கறிஞராகிய நார்ட்டனின் படம்கூட நீதிமன்றத்தில் இடம் பெறுவது தடுக்கப்பட்டு வராந்தாவின் ஒரு பகுதியில் வைக்கவே அனுமதிக்கப்பட்டது என்கிறார்கள். பார் அஸோஸியேஷன், அட்வகேட்டுகள் சங்கம் இரண்டில் எதிலாவது வைக்கலாமே என்றுவோ சென்னை உயர்நீதி மன்றத்தைச் சேர்ந்த இரு வழக்கறிஞர் சங்கங்களுமே அப்படத் திறப்புக்கு இசையவோ, ஏற்பாடு செய்யவோ இல்லையாம். இந்த நிலையில் யார் சொல்லி, யார் ஏற்று எப்படி இது நடக்கிறது என்று வக்கீல்கள் ஆச்சரியப்படுகிறார்கள். 'யார் சொல்லி எப்படி நடந்தாலும் பரவாயில்லை, இதை வரவேற்கிறோம்' என்றும் சில வக்கீல்கள் அறிக்கை விட்டிருக்கிறார்கள்.

இறந்துபோன ஒருவரைப்பற்றிய இங்கிதக் குறைவான சர்ச்சையில் இறங்குவது சரியில்லை என்றாலும் 'நீதிமன்றம் என்பது அரசியலில் செல்வாக்குப் பெற்று இறந்த வக்கீல்களின் படக் காட்சிசாலை ஆகிவிடலாகாது' என நினைப்போர் நினைவிலுள்ள நியாயத்தை நம்மால் மறுக்கத்தான் முடியவில்லை.

## மாநகராட்சியின் குரல்

மத்திய அரசாங்கத்தை நோக்கி மாநில சுயாட்சிக் குரல் எழுப்பிக் கொண்டிருக்கிற தமிழ் நாடு அரசாங்கத்திடம் சென்னை மாநகராட்சி உரிமைக் குரல் எழுப்பத் தொடங்கி யிருக்கிறது.

சென்னை நகரில் நிறைவேற்றப்படவிருக்கும் ரூபாய் இரண்டு லட்சத்துக்கு மேல் செலவிடப்பட வேண்டிய கண்ட்ராக்டுகள் சிலவற்றைக் கார்ப்பரேஷன் மூலமாக விடுவதற்குப் பதிலாக அரசாங்கம் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் மூலமாக விடத் தீர்மானித்திருக்கிறதாம். இதைச் சென்னை மாநகராட்சி கடுமையான முறையில் கண்டித்து ஆட்சேபனை தெரிவித்திருக்கிறது. சென்னை நகர முனிசிபல் கார்ப்பரேஷன் சட்டத்தைத் திருத்தும் உத்தேசத்தை அரசு உடனே கைவிட வேண்டும் என்றும் மாநகராட்சி அரசாங்கத்தை வேண்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறது. இன்றுள்ள சூழ்நிலையில் கண்ட்ராக்ட் விடும் உரிமை பற்றிச் சர்ச்சை எழுந்துள்ளதுதான் ருசிகரமான அம்சமாகும்.

## நியாயமான கேள்வி

நாகர்கோவிலில் ஒரு பொதுக் கூட்டத்தில் சொற்பொழிவாற்றுகையில் மத்திய மாநில அரசாங்கங்களை நோக்கி ஒரு நியாயமான கேள்வியைக் கேட்டிருக்கிறார் திரு காமராஜ் அவர்கள்.

"விலைவாசி உயர்வுக்குக் கள்ள மார்க்கெட்காரர்களும், பதுக்கல் பேர்வழிகளும்தான் காரணம் என்று மாநிலங்களிலும் மத்தியிலும் ஆளும் திறமைக் குறைவான அரசாங்கங்கள் சொல்லித் தப்பித்துக் கொண்டு விடப் பார்க்கின்றன. கள்ள மார்க்கெட்காரர்களும், பதுக்கல் பேர்வழிகளும், கறுப்புப் பண ஆட்களும் அதிகாரிகளுக்குத் தெரியாமல் எப்படி இருக்க முடியும்? அதிகாரிகளும், சர்க்காரும் திறமையாக இருந்தால் இவற்றையெல்லாம் கண்டுபிடித்துத் நிலைமையைக் களைய முடியாதா? விலைவாசிகள் கடுமையான அளவில் ஏறியிருப்பதற்கு மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கமும் தங்களுக்குள் மாற்றி மாற்றி ஒன்றை ஒன்று குற்றம் சாட்டித் தப்பித்துக் கொள்ளப் பார்ப்பது பொதுமக்களை ஏய்ப்பதற்கான தந்திரம்தானே தவிர வேறு எதுவுமில்லை. சர்க்காரில் அடிமுதல் நுனிவரை எங்கும் ஒழுங்கீனங்களும், ஊழல்களுமே மலித்

அவங்க நினைத்துக் கொண்டு....

அபிட்சக் கற்பனை..

....கொள்ளையனும்!

வெல்ல வாசி....!

மக்கள்

பற்றாக்குறை

தி.மு.க. ஆட்சி

அதிமுக

உள் நாட்டைப் பொறுத்தவரை சோஷலிஸம்... சோஷலிஸம்னு! சொல்லியே சமாளிச்சுடுவேன்!

அயல் நாடுகளைப் பொறுத்தவரை ஏகாதிபத்தியம் --- ஏகாதிபத்தியம்னு! சொல்லியே சமாளிச்சுடுவேன்!

மாநிலத்தைப் பொறுத்தவரை சுயாட்சி சுயாட்சின்னு! சொல்லியே நானும் சமாளிச்சுடுவேன்!

துள்ளன. ஊழல் மந்திரிகளைப் பார்த்து வியாபாரிகளும், பொதுமக்களும் கெடுகிறார்கள். எங்கும், எதிலும் எல்லாரும் அதிகாரத்தையும், பணத்தையுமே தேடி அலைகிறார்கள். தமிழ் நாட்டில் மட்டுமின்றி நாடு முழுதுமே இதுதான் நிலைமை. ஊழல்களையும், பதுக்கலையும் கண்டுபிடித்துத் தண்டிக்க வேண்டிய அதிகாரிகள் அவற்றைப் பற்றிப் பேசுவதால் மட்டும் என்ன பயன்?'' என்று அவர் கேட்டிருக்கும் விஷயிலுள்ள நியாயத்தை அரசாங்கங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## பாரதி கலை அரங்கு

சென்னை பாரதியார் சங்கம் நடத்திய பாரதி விழாவின்போது பாரதியார் சங்கத்தின் தலைவர் திரு நா. மகாலிங்கம் நகர மக்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் ஒரு செய்தியைத் தெரிவித்திருக்கிறார். எழும்பூர்ப் பகுதியில் பாரதியார் பெயரில் கலை அரங்கம் கட்டுவதற்காக 30 கிரவுண்ட் நிலத்தைத் தமிழ்நாடு அரசாங்கம் தர இருக்கிறது என்றும் அந்த இடத்தில் 1,500 பேர் உட்காரக்கூடிய விசாலமான கலை அரங்கு ஒன்றைக் கட்டும் ஏற்பாடுகளைச் செய்து 1982ம் ஆண்டு பாரதி நூற்றாண்டு விழா வருவதை யொட்டி அதைத் திறக்க ஏற்பாடு செய்யப்படும் என்றும் தெரிவித்தார்.

## வேதாரண்யம் சின்னம்

அமரர் ராஜாஜி அவர்கள் உப்பு சத்தியாக்கிரகத்தின்போது தஞ்சை மாவட்டம் வேதாரண்யத்தில் உப்பு அள்ளிய பகுதியில் இருந்த ஞாபகச் சின்னம் ஏற்கனவே உப்புக் காற்றினால் பலவீனமாகி அரிக்கப்பட்டிருந்தது. சமீபத்தில் இடியினால் தாக்குண்ட அச்சின்னம் தகர்ந்து விழுந்துவிட்ட செய்தியைப் பத்திரிகையில் கண்டிருக்கலாம்.

அச்சின்னத்தைப் புதுப்பித்துக் கருங்கல்லால் ஒரு திடமான புது ஸ்தூபி எழுப்புவதற்கான குழு ஒன்றை முன்னாள் முதல்வர் திரு பக்தவத்சலம் வேதாரண்யத்துக்கு நேரில் சென்று அமைத்து விட்டு வந்திருக்கிறார். இந்த முதிர்ந்த வயதிலும் திரு பக்தவத்சலம் அவர்களுக்கு நல்ல நினைவுகளைப் பாதுகாப்பதில் உள்ள அக்கறையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

## கோவில் மதில்களில் கடைகள்

கும்பகோணம் சோமேசுவரசுவாமி கோவிலின் தெற்குப்புற மதிலை இடித்துக் கடைகள் கட்டப்பட்டு வருகின்றன. இதை எதிர்த்துத் தமிழ் நாடு இந்து தேவாலயப் பாதுகாப்புக் குழுவினரும், கும்பகோணம் நகர மக்களும் போர்க் கொடி உயர்த்தியுள்ளார்கள். கொஞ்சம் அயர்ந்தால் கோவிலையே கடையாக்கி வாடகைக்கு விட்டு விடுவார்களோ என மக்கள் அஞ்ச வேண்டிய நிலையிலிருக்கிறது. இன்று மதில்களை இடித்துக் கடை கட்டி வாடகைக்கு விடுபவர்கள் நாளை அர்த்த மண்டபம், கர்ப்பக்கிருகம் எல்லாவற்றையும்கூட வாடகைக்கு விடத் துணிய மாட்டார்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது, இந்த ஆட்சியில்?

## சுவரொட்டிகளின் மகிமை!

இம்மாதம் 13ந் தேதி நடைபெற்ற அடையாள வேலைநிறுத்தத்தை முன்னிட்டு அதை நடத்திய கட்சிகள் சுவரொட்டிகள் தயாரித்து ஒட்டின. ஒட்டப்பட்ட சுவரொட்டிகளை யாரும் பார்த்துவிடாமல் தடுக்க வேண்டும் என்று ஆளும் கட்சி அநுதாபிகள் அவற்றைக் கிழிக்க முற்பட்டதால் ஆவல் பல மடங்கு தூண்டப்பட்டுச் சுவரொட்டிகள் தென்பட்ட இடங்களில் திருவிழாக் கூட்டம் போல் மக்கள் நின்று பார்க்கும்படி நேர்ந்து விட்டது.

'பந்த்' தினத்தன்று ஒவ்வொரு சுவரொட்டியின் மீதும் அதிலுள்ள வாசகங்களின் அர்த்தத்தைக் குழப்புவதுபோல் திடீரென்று 'கோரணாவில்' என்றொரு வார்த்தை ஒட்டப்படவே சுவரொட்டிகளின் மகிமை இன்னும் அதிகமாகியது!

### ராஜாஜி சிந்தனை

ஒரு மரம் நடுவதைவிடச் சிறந்த வேலையொன்றை எந்த அதிகாரியும் — அவர் ஒரு போலீஸ்காரரோ, காரியாலயச் சேவகரோ, கவர்னரோ யாராக இருந்தாலும் சரி — செய்ய முடியும் என்று நான் நினைக்கவில்லை. பதிலுக்கு இரண்டு கன்றுகளையாவது நடாமல் இந்தியாவில் யாரும் ஒரு மரத்தை வெட்டக் கூடாது; மரங்களுடைய இளம் கிளைகளை வெட்டி எறியக் கூடாது. நம்மால் எப்படி விரல்களை இழக்க முடியாதோ அது போலவே மரங்களும் தங்களுடைய இளம் கிளைகளை இழக்க முடியாது. உங்கள் கைகளில் உள்ள விரல்களை மரங்கள் பிடுங்கி எறியத் தொடங்கினால் அது உங்களுக்கு எப்படி இருக்கும்? பாவம், மரங்களால் அப்படிச் செய்ய முடியாது. ஏனெனில், அவை இருந்த இடத்தைவிட்டு நகர முடியாது. நடமாடும் சக்தி நமக்கு அளிக்கப்பட்டுள்ளது. அந்தச் சக்தியை நாம் துஷ்பிரயோகம் செய்யக் கூடாது.

பருத்தியிலே விளைந்திடும் கற்பனைகள் அற்புதமோ அதி அற்புதம்

# டிசைன்கள்



நேர்த்தியான மதிப்பு ....நறுவிசான பொலிவு ...
நல்லழகு ...
இயற்கைச் சிறப்பிலே இணையற்றது பருத்தி



**ஸெஞ்சுரி**— 100% பருத்தித் துணிகள்

தி ஸெஞ்சுரி ஸ்பின். அண்டு. மான்பு. கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT-CM-533 P-TAM

# வடகோடியில் காமகோடி



பாரதத்தின் பரம பாவனமான பதிகளுள் இமயத்தின் அரவணைப்பில் திகழும் ரிஷிகேசம் ஒன்று. 'ஹ்ருஷிகேசம்' என்பதே இதன் சரியான பெயர். இந்திரியங்களை அடக்கி ஆளுகிற பரந்தாமன் 'ஹ்ருஷிகேசன்' எனப்படுகிறான். அவனது சாந்நித்தியம் ததும்பும் இடமே ஹ்ருஷிகேசம். துளும்பி ஓடும் கங்காதேவியும், கண்ணுக்கெட்டிய தூரம் ஓங்கி நிற்கும் இமாசலமும் தெய்விகத்தைப் பொழியும் இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் வெறி கொண்ட பொறி புலன்கள் தாமே அடங்கிச் சாந்தமும், திவ்விய போதையும் இயல்பாகச் சித்திக்கத்தான் செய்யும்.

சித்தர்களும் யோகிகளும் ரிஷிகளும் எந்நாளும் நாடி வரும் ரிஷிகேசத்தில் இந்தச் சாதுர்மாஸ்யத்தின்போது மற்றொரு சிறப்பு கூடிற்று. ஆனிப் பூர்ணிமையிலிருந்து ஆவணிப் பூர்ணிமை வரையில் சந்நியாசிகள் 'சாதுர் மாஸ்ய' விரதம் அநுஷ்டிக்கிறார்கள் அல்லவா? இன்று இப்புவியிலுள்ள சந்நியாச பீடங்களில் சிரோமணியாக விளங்குவது ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம். இப்பீடத்தின் அதிபதிகளாக இருக்கும் பாக்கியத்தைப் பெற்ற புதுப் பெரியவர்களாகிய ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் இவ்வருட சாதுர்மாஸ்ய விரதத்தை ரிஷிகேசத்தில் அநுஷ்டித்துப் பூர்த்தி செய்தார்கள்.



கவின்மிகு கங்கைக் கரையோரத்தில் உள்ள ஆந்திர ஆசிரமத்தில் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் இருக்கை கொண்டிருந்தார்கள். இது ஏழுமலையப்பனின் தேவஸ்தானத்தைச் சேர்ந்தது. ஆந்திர ஆசிரமத்தில் இவ்விரு மாதங்களும் என்றுமில்லாப் பரபரப்பும், ஜன நெரிசலுமாக இருந்தது. அவ் வாசிரமம், திரிபுரசுந்தரி சமேத சந்திரமௌளீச்வரர் தர்பார் நடத்திய அரண்மனையாகக் கோலம் கொண்டது.

உத்தர பாரதத்துக்கு யாத்திரை செய்ய விரும்பும் தமிழர் பலர் புதுப் பெரியவர்கள் இமயமலைப் பிரதேசத்துக்குச் சென்றுள்ள இதுவே உகந்த சமயம் என்று எண்ணினரோ என்னவோ? அந்த அளவுக்கு ரிஷிகேச ஆந்திர ஆசிரமத்தில் 'மடிசார் மாமி'களின் நடமாட்டம் இருந்தது! தமிழர்கள் மட்டும்தான் என்பதில்லை. புதுப் பெரியவர்கள் வட நாட்டவரையும் வெகுவாக ஆகர்ஷித்திருக்கிறார்கள். வடநாட்டவர்கள் பொதுவாக ஆசார காரியங்களான பூஜை முதலியவற்றுக்குக்கூடச் சட்டையைக் கழற்ற மாட்டார்கள். அவர்களது குளிர் காலக் கடுமை காரணமாக இப்படித் தேசாச்சாரம் அமைந்திருக்கிறது. ஆனால் இவர்களில் பெரும்பாலோரும்கூட, தமிழர்கள் திறந்த மேனியுடனேயே தரிசனம் செய்வதில் உள்ள அடக்கப் பண்பை உணர்ந்து தாங்களாகவே சட்டையைக் கழற்றிவிட்டுப் புதுப் பெரியவர்களைத் தரிசிக்க வந்ததைப் பார்க்கும்போது, இந்த ஆர்ப்பாட்ட யுகத்திலும் கூட, தாங்களாகக் கட்டுப்படுகிற உணர்வு நம் மக்களுக்குப் போகவில்லை என்று தெரிந்தது.

சாதுர்மாஸ்யத்தின்போது ஸ்ரீ புதுப் பெரியவர்கள் தேஜோபிம்பமாகக் கங்காதீரத்தில் ஜபயோக தியானங்கள் செய்த வைபவமும், ஸ்ரீமடத்து முகாமில் அவர்கள் புரிந்த பூஜை விமரிசையும் பக்தர் உள்ளங்களை யெல்லாம் மேம்படுத்தின.

புதுப் பெரியவர்கள் மற்றோர் அரும் பணியும் செய்தார்கள். டேராடூன் மாவட்டத்திலுள்ள அறுபதுக்கு மேற்பட்ட உயர்பள்ளி, கல்லூரி ஆசிரியர்களுக்கு ஸ்ரீமடத்தின் ஆதரவில் நமது சநாதன தர்ம நெறியில் போதனைக் கருத்தரங்கு நடத்தினார்கள். ஐந்து நாட்கள் நடைபெற்ற இக்கருத்தரங்கில் எதிர்காலப் பிரஜைகளை உருவாக்க வேண்டிய ஆசிரியர்களுக்கு நமது புராதன சமயத்தின் அடிப்படைகள் விளக்கப்பட்டன. ஆசிரியர்களுக்கும் ஆசிரியராக உபந்நியசித்தார் ஸ்ரீ ஆசாரியர்கள். ஸம்ஸ்கிருதமும், ஆங்கிலமும் பக்க



பலமாக நிற்க, ஹரித்துவிலேயே புதுப் பெரியவர்கள் சக்கைப் போடு போடுவது கண்டு வடக்கத்தியர் ஆதிசயித்தனர். ஆனால் ஸ்ரீ ஸ்வாமிகளோ தமக்கே உரிய வாய்விட்ட சிரிப்போடு ''என் ஹரித்துவில் இறந்தகால, நிகழ்கால, எதிர்கால வேறுபாடுகளே அதிகம் கிடையாது. தர்மத்துக்குக் காலப் பாகுபாடு இல்லை அல்லவா?'' என்றார்கள்!

நவீனக் கல்வியாளர்களுக்குக் கருத்தரங்கு அமைத்ததோடு, பிராசீன பண்டிதர்களைத் திரட்டிக் கம்பீரமான வாக்யார்த்த வித்வத் சதஸையும் கம்பீர இமயச் சாரலில் நடத்தினார்கள். உத்தரப் பிரதேசம், பீஹார், அஸ்ஸாம் முதலிய மாநிலங்களிலிருந்து ஐம்பதுக்கு மேற்பட்ட சாஸ்திர விற்பன்னர்கள் இந்தச் சதஸுக்கு வந்திருந்தனர். சதஸுக்கான ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்து தந்தது தில்லி சங்கர அகாடெமி.

வங்கம் முதல் ஹரியானா உட்பட்ட மாநிலங்களின் வேத வித்துக்களை வரவழைத்து இரு தினங்கள் வேத பாராயணம், ஹோமம், உபந்நியாசம், ஆகியனவும் நடத்திச் சாதுர் மாஸ்யத்தை மேலும் பொருள்படச் செய்தார் ஸ்ரீ ஸ்வாமிகள்.

சாதுர்மாஸ்ய காலத்தில் நிகழ்ந்த கோகுலாஷ்டமி, விநாயக சதுர்த்தி முதலியன ரிஷிகேச மட முகாமில் உத்சவமாக நடந்தேறின. காஞ்சி மடத்தில் பூஜிக்கப்பெற்ற விக்நேச்வரப் பெருமான் கங்கையில் விசர்ஜனம் செய்யப்பட்டதிலிருந்து, இப்போது அரசியல்வாதிகள் ஓயாமல் முழக்கி வரும் 'உணர்ச்சி பூர்வ ஒருமைப்பாடு' ஆதியிலிருந்தே நம் சமயத்தால் சாதிக்கப்படுவது நிதர்சனமாயிற்று.

ஆதிசங்கரர் அவதரித்த தென்னகத்தின் தெய்வ தூதராக வட இந்திய பக்தகோடிகள் போற்றும் ஸ்ரீ காமகோடி புதுப் பெரியவர்கள் மேலும் வட கோடி வரையில் செல்ல விருக்கிறார்கள். செப்டம்பர் 12-ந் தேதி சாதுர் மாஸ்யத்தைப் பூர்த்தி செய்த ஸ்வாமிகள் புண்ணியப் பதரிநாதத்தில் நவராத்திரி விழாவை நடத்துகிறார்கள்.

காஞ்சி சிவாஸ்தானத்தில் சிவஸ்வரூபமாகப் பொலிந்து கொண்டிருக்கும் ஸ்ரீ பெரியவர்களின் அருட் சக்தியில், தேசமெங்கணும் தெய்விகத்தையும் வைதிகத்தையும் பரப்பி வரும் புதுப் பெரியவர்களின் அகில பாரத சஞ்சாரம் இனிதே நிறைவேறும். இரு பெரியவர்களையும் வணங்கி உய்வு பெறுவோம்!

**(ஸ்ரீ ஜனார்த்தனன் அனுப்பி வைத்த செய்திகளின் அடிப்படையில் எழுதிய கட்டுரை)**

பட விளக்கம் — இடது பக்கம்:

☐ கங்கைக் கரையில் தியானம்
☐ கல்லூரி ஆசிரியர்களுடன் புதுப் பெரியவர்கள்

இந்தப் பக்கத்தில்:

☐ புனித நதிக்கரையில் புதுப் பெரியவர்கள்
☐ கங்கையில் விநாயகர் விசர்ஜனம்
☐ தியானத்தில் ஈடுபட்ட திருவுருவம்.

(புகைப்படங்கள்: ஜனார்த்தனன்)





பரிசுத்தமான பாலினல் செய்யப்பட்டது





காட்பரிஸ் சாக்கலேட்

சுவையானது
மட்டுமல்ல...
போஷாக்கு
அளிக்கவும் வல்லது!




பரிசுத்தமான பால்,
சத்துள்ள கோகோ,
இவையுடன் சர்க்கரையின்
இனிப்பு — அதுவே
காட்பரிஸ் மில்க் சாக்கலேட்!



காட்பரிஸ்

ஒவ்வொரு சாக்கலேட்டும்
பாலின் குணங்கள் அடங்கியது!

AIYARS-C.142 TM

# சிவ விஷ்ணு அபேதம்

## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

குணங்கள் மூன்று விதம். சத்துவம், ரஜஸ், தமஸ் என்பன அவை. சத்துவம் என்பது சாந்தம், அன்பு. அதன் நிறம் வெண்மை. அதாவது வெள்ளை வெளேரென்ற வஸ்துவைப் பார்த்தாலே மனசில் ஏற்படுகிற பரிசுத்த மலர்ச்சிதான் சத்வம். ரஜஸ் என்பது வேகம். இதில் நல்லது, கெட்டது இரண்டும் கலந்து இருக்கும். இதன் நிறம் சிவப்பு அல்லது செம்மஞ்சள். செக்கச் செவேல் என்று இருப்பதில் அழகும் உண்டு, கண்ணைக் குத்துகிற மாதிரி பயப்படுகிற நிறுகம் உண்டு. உதய சூரியனையும் செம்பருத்தியையும் பார்த்தால் சிவப்பே அழகாயிருக்கிறது. ரத்தத்தைப் பார்த்தால் அச்சமாயிருக்கிறது. தமஸ் என்பது முழுக்கவும் கெட்ட குணம். சோம்பல், தூக்கம் எல்லாம் இதைச் சேர்ந்தவை. இதன் நிறம் கறுப்பு. அதாவது அஞ்ஞான இருள் மயமானது.

சத்துவ — ரஜோ — தமோ குணங்களில்தான் எல்லா மனிதர்களும் கட்டுண்டு கிடக்கிறோம். எல்லாம் ஒரே பரமாத்மாவிடமிருந்து வந்ததால், சத்துவம், ரஜஸ், தமஸ் இவற்றுக்கும் பரமாத்மாவின் மூன்று மூர்த்தி பேதங்களைச் சொல்கிறார்கள்.

ஜனனம் என்பதில் நல்லதும் கெட்டதும் கலந்து இருக்கிறது. காம வேகத்தினால்தான் பிறப்பு உண்டாகிறது. எனவே சிருஷ்டிக்கெல்லாம் காரணமாயிருக்கிற பிரம்மாவை பரமாத்மாவின் ரஜோ குண மூர்த்தி என்று வைத்தார்கள். இதில் யாருக்கும் அபிப்பிராய பேதமில்லை. பிரம்மா மஞ்சள் சிவப்பாக இருக்கிறவர்.

பரிபாலனம் செய்வது சத்துவ குணத்தால் நடப்பது. மகா பாபம் செய்கிற நமக்கு ஒரு வேளை சோறு கிடைக்கக்கூட லாயக்கில்லை. அப்படியிருந்தும் ஈ எறும்பிலிருந்து சகல ஜீவராசிகளுக்கும் உணவு கிடைக்கும்படி செய்து ரட்சிப்பவர் மகாவிஷ்ணு. இவரை சத்துவ மூர்த்தி என்று வைத்தார்கள்.

சம்ஹாரம் என்பது அழிப்பது. அழிக்கிற குணம் தமஸைச் சேர்ந்தது. இதனால்தான் சம்ஹார மூர்த்தியாகிய சிவனை தமோ மூர்த்தி என்றார்கள்.

இதிலிருந்துதான் சைவ — வைணவப் பிணக்கு யாவும் வந்தது. மகாவிஷ்ணுவின் பரிபாலனத்தைச் சத்துவம் என்று சைவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இந்த நிலையற்ற இகலோக வாழ்க்கையைப் பரிபாலிப்பது என்பது மனிதனை மேலும் மேலும் அஞ்ஞானத்தில் தள்ளுகிற காரியம்தான். இதில் சத்துவம் இல்லை. சிவன்தான் அஞ்ஞானம் நீங்க ஞானோபதேசம் செய்கிறவர். இந்த ஞானோபதேசத்துக்குப் பக்குவமாக இல்லாதவர்களைக்கூட அவர் பரம கிருபையோடு அவ்வப்போது கர்மக் கட்டிலிருந்து விடுவித்து ஓய்வு தருவதற்கே சம்ஹாரம் செய்கிறார். பிறவிகளுக்கு நடுவே சம்ஹாரத்தின் மூலம் விச்ராந்தி தருகிற கருணா மூர்த்தியே, சிவபெருமான். இத்தொழில் தமஸ் அல்ல. சத்வமே என்று சிவபக்தர்கள் சொல்கிறார்கள். வைஷ்ணவர்களோ மகா விஷ்ணு உலகத்தைப் பரிபாலனமும் பண்ணுவார்; அவரே பரம ஞானமும் தருவார்; அவரே முழுமுதல் கடவுள்; சிவன் அவருக்குக் கீழ்ப்பட்டு சம்ஹாரம் செய்கிறார் என்கிறார்கள்.

ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்களின் சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டிருக்கிற நாம் சைவரும் அல்ல; வைஷ்ணவரும் அல்ல.. நமக்கு ஸ்மார்த்தர் என்று பெயர். ஸ்மிருதிகள் என்கிற சாஸ்திரங்கள் சொல்வதை அநுசரிக்கிறவர்களே ஸ்மார்த்தர்கள். நமக்கு சிவன், விஷ்ணு, இன்னும் மீதமுள்ள எல்லாத் தெய்வமுமே ஒரே பரமாத்மாவின் வெவ்வேறு ரூபங்கள்தான். இதில் ஏற்றத் தாழ்வே இல்லை.

இப்படி நாம் சொன்னால் மற்றவர்கள் விடுவார்களா? தங்கள் தங்கள் தெய்வத்தின் தொழிலைச் சொல்லி இதுதானே சத்துவ மூர்த்தி என்று கேட்கிறார்கள். சத்துவ மூர்த்தியைத்தான் வழிபட வேண்டும். இதனால்தான் இரு கட்சிக்காரர்களும் ரஜோ மூர்த்தி என்று வைத்துவிட்ட பிரம்மாவுக்குக் கோயிலோ வழிபாடோ இல்லை.

நாம் நடுநிலையில் நின்று யோசித்துப் பார்ப்போம். பிரம்மாவின் தொழிலும் ரஜஸ்; நிறமும் ரஜஸ். அவர் வசிக்கிற தாமரையும் சிவப்பாக ரஜோ சம்பந்தமாகவே இருக்கிறது. ஆனால் சிவனையும், விஷ்ணுவையும் பாருங்கள். பரிபாலனம் என்கிற சத்துவத் தொழிலைச் செய்கிற விஷ்ணு வெளுப்பாகத்தானே இருக்க வேண்டும்? ஆனால் இவர் கரியவராக இருக்கிறார். இது தமஸின் நிறம். அதோடு கூட இவர் ஆதி சேஷன் மேல் நீள நெடுகப் படுத்துக் கொண்டு எப்போது பார்த்தாலும் தூங்கிக் கொண்டிருக்கிறார். தூக்கமும் தமஸைச் சேர்ந்ததுதான்.

சிவனைப் பார்ப்போம். அழிவு என்கிற தமோ குணத் தொழிலைச் செய்கிற இவர், கறுப்பாக இல்லாமல் 'சுத்த ஸ்படிக ஸங்காசம்' என்றபடி சுத்த சத்துவ வர்ணமாயிருக்கிறார். இவர் இருக்கிற பனிமலையான கைலாசமும் அப்படியே இருக்கிறது. விபூதிப் பூச்சு, ரிஷப வாகனம் எல்லாம் ஒரே வெளுப்பு. இவர் தூங்குவதில்லை. ஒன்று சாந்த தட்சிணாமூர்த்தியாக இருக்கிறார்; அல்லது நடராஜனாக ஆனந்தக் கூத்தாடுகிறார். இதெல்லாம் சத்துவமாமாகவே இருக்கிறது.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? சிவனும் விஷ்ணுவும் தனித் தனியாக சத்துவ மூர்த்தி, தமோ மூர்த்தி என்று பிரிந்திருக்கவில்லை. இருவரிடமும் சத்துவம் தமஸ் இரண்டும் கலந்திருக்கின்றன. ஒருவர் ரூபத்தில் தமஸ், காரியத்தில் சத்துவம்; இன்னொருத்தர் ரூபத்தில் சத்துவம்; காரியத்தில் தமஸ். காரிய சத்துவத்தை வைத்து வைஷ்ணவர் விஷ்ணுவை வணங்குகிறார்கள். ஸ்வரூப சத்துவத்தால் சைவர் சிவனையே தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள். பட்சபாதமில்லாமல் யோசித்தால் இரு குணங்களும் இரு மூர்த்திகளிடமும் கலந்திருப்பதால் சாராம்சத்தில் இரண்டும் ஒன்றே என்று தெளியலாம்.

(அடுத்த இதழில்: **அரியும் சிவனும் ஒண்ணு**)

சிவதேவனின் கைக் கலக்கலால் கரு மேகங்கள் திரண்டு கொண்டிருந்தன. இன்னும் சிறிது நேரத்தில் பெருமழை பெய்யும் அறிகுறி எங்கும் தெரியலாயிற்று. சில்லிட்ட காற்று பருவ காலத்தின் குளிரை வீசிக் கொண்டிருந்தது.

காலை வேளையில் கருக்கிருட்டு தட்டியிருந்தது. வீதியில் நடமாடும் அனைவரையும் நடுங்க வைத்துக் கொண்டிருந்த குளிர் எலும்புக் குருத்துக்களையும் ஊடுருவிக் கொண்டிருந்ததாலோ என்னவோ இளசுகளும் பற்கள் தாளமிட நடுங்கிக் கொண்டிருந்தன.

சாபாஸ்டியன் அதையும் பொருட்படுத்தாமல், மரத்தடியில் கிழிந்த பந்தலில் கடை



# தெய்வ தரிசனம்



விரித்திருந்தான். கூர் தீட்டும் கல்லைத் துடைத்து விட்டுத் தோலை அறுக்கும் உளியைக் கூர்படுத்திக் கொண்டான். குத்தூசியையும் பதம் பார்த்துக் கொண்டான். தேவையான அளவுக்கு நூலெடுத்துத் திரித்து மெழுகிட்டுக் கொண்டான். கடகடவென அவன் தாடையும் தந்தியடித்துக் கொண்டிருந்தது. கிழிந்து கிடந்த அவனுடைய சொக்காய் குளிர் காற்றுக்கு இடம் கொடுத்துக் கொண்டிருந்தது.

அவனுடைய எண்ணமெல்லாம் வேறு எதிலுமில்லை. சிங்கிள் டீக்காகத்தான் அவசரப்பட்டுக் கொண்டிருந்தான். குளிரைச் சமாளித்துக் கொண்டிருந்த அவன் யாராவது வந்து எதையாவது தைக்கச் சொன்னால் போதுமென்றிருந்தான்.

பத்துப் பைசா கிடைத்தாலும் போதும். அவனுடைய நேற்றைய வருவாயில் ஐந்து பைசா மீதமிருந்தது. ஒரு டீயாகும். காலையில் பெட்டிக் கடை நாயரிடம் சென்று சிங்கிள் டீ கேட்டான். வழக்கமாகக் கொடுத்துதவும் நாயர் அன்று கொடுக்கமறுத்து விட்டான். காலையில் போணி ஆகவில்லையாம்.

வருவோர், போவோரின் கால் செருப்புக்களையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான் சாபாஸ்டியன். அவன் கழுத்தில் ஆடிக் கொண்டிருந்த சிலுவை மணியைப் பத்தாம் முறையாக முத்தமிட்டான்.

'ஆண்டவரே என்னைக் காப்பாத்தும்!' இது தான் அவனுடைய ஜெபம். தூரத்தே பாதிரியார் ஒருவர் வந்து கொண்டிருந்தார். சாபாஸ்டியன் கிராக்கிக்காகக் காத்துக் கொண்டிருந்தான். லேசாகத் தூறல் போட ஆரம்பித்தது.

சில்லென்று வீசிய குளிர் காற்று அவனை மேலும் உலுக்கிக் கொண்டிருந்தது.

வந்த பாதிரியார் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டார். வானத்தை அண்ணாந்து பார்ப்பதும், தம் கை அங்கியை விலக்கி மணியைப் பார்ப்பதுமாக இருந்தார்.

சாபாஸ்டியன் சிலுவையை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டான். ஏற்கனவே

பெய்த மழையில் கொஞ்சம் தண்ணீர் தேங்கி யிருந்தது. அதை அந்த வழியே ஓடிய டாக்ஸி பாதிரியார் மேல் வாரியிறைத்து விட்டு ஓடிவிட்டது. அங்கியில் படாதிருக்கத் திடீரென்று தாண்டிக் குதிக்க முயன்ற பாதிரியாரைக் கல் தடுக்கி விட்டது.

வலது காலில் அணிந்திருந்த செருப்பின் சுற்று வார் படீரென்று அறுந்து பல்லிளித்தது. மெல்லச் சிரித்துக் கொண்டார் பாதிரியார்.

அருகில் மரத்தடியில் செருப்புத் தைக்க ஆள் இருப்பதைப் பார்த்தார். கைக் கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டார். டாக்ஸியோ, பஸ்ஸோ ஒன்றும் வரவில்லை. மணியைப் பார்த்துக் கொண்டே சாபாஸ்டியனிடம் சென்றார் பாதிரியார்.

செருகியதும் இழுத்ததும் ஒன்றுமே தெரியவில்லை அவனுக்கு. இங்கும் அங்குமாக நன்கு அழுத்தமாக 'டாக்கா' போட்டு பாலீஷ் போட டின்னைத் திறந்தான்.

பாதிரியார் அவன் கழுத்தில் சிலுவையைக் கண்டார். ''உன் பெயர்?'' என்றார்.

''என் பேரு சாபாஸ்டியனுங்க!'' பாலீஷ் போட்டுவிட்ட அவன் எழுந்து, கரங்குவித்து நின்றான். சாமியார் செருப்பைக் காலில்

# சிறப்புச் சிறுகதை




செல்வராஜ்

அவர் தன்னை நோக்கி வருவதைப் பார்த்தவன் ஒரு கணம் அதிர்ந்தான். பிறகுதான் அவர் செருப்புக்கு வார் அறுந்திருப்பதைப் பார்த்தான்.

''சாமி! என் தோத்திரம் சாமி!'' என்று எழுந்து வணங்கினான் அவன்.

''ஆசீர்வாதம்!'' என்று மட்டுமே கையைத் தூக்கினார் பாதிரியார்.

செருப்பைக் கழற்றி அவனுக்கருகில் வைத்தார். அளவில்லா மகிழ்ச்சியுடன் வேலையை ஓடவிட்டான் சாபாஸ்டியன். காலையில் சாமியாருக்கு முதன் முதலில் தைப்பதில் பரம ஆனந்தம். குத்தூசி மெழுகிட்ட நூலைச் மாட்டிக் கொண்டு அங்கியில் கையை விட்டார். பர்ஸைத் திறந்தார்.

''சாமி, நீங்க ஒண்ணும் கொடுக்க வேண்டாமுங்க!'' என்று தலையைச் சொறிந்தான்.

''பரவாயில்லை சாபாஸ்டியன். இதை வாங்கிக்கோ!'' என்று எட்டணா நாணயத்தை நீட்டினார்.

''சாமிக்கு மொத மொதல்லே செருப்பு தைச்சிருக்கேன்! இன்னிக்கு நல்ல கிராக்கி கண்டிப்பா கிடைக்குமுங்க. வேண்டாங்க!'' என்று அதை வாங்க மறுத்தான்.

''அடடே ! இதென்னப்பா ! தொழிலைச் செய்துவிட்டுக் காசு வாங்காம...! அது

எனக்குப் பாவமப்பா! எனக்கு நேரமாகுது. பிடி!'' என்று தொந்தரவு செய்தார் பாதிரியார்.

''இன்னிக்கு நாத்திக்கிழமைங்க! கோயில் உண்டியிலே நான் போட்டதா இருக்கட்டுமின்னு நீங்களே போட்டுடுங்க சாமி'' என்று குழைந்தான் அவன்.

மலைத்து நின்றார் சாமியார். அவனுடைய விசுவாசத்தை எப்படிக் கணிப்பதென்று அவருக்கு விளங்கவில்லை போலும். சிலையாக நின்றவர். ''சரியப்பா! ஏகநாதர் சாமிக்கு நான் வேறே போட்டுவிடுறேன். இதை வைத்துக் கொள்'' என்று மறுபடியும் நீட்டினார்.

அவன் வாங்கவில்லை.

அதற்குள் ஒரு டாக்சி காலியாக அந்த வழியே வந்தது. ''ஏம்பா, டாக்சி!'' என்று உரக்கக் கத்தினார் பாதிரியார். டாக்சி நின்றது.

'' நான் வரட்டுமா! கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கட்டும் '' என்றவர் அடுத்த பைக்குள் கையை விட்டார். சாபாஸ்டியன் சார்பில் அந்தக் காசைப் பத்திரப்படுத்திக் கொண்டார். அப்படியே உள்ளிருந்த ஒரு சிறிய புஸ்தகத்தை எடுத்தார். ''உனக்குப் படிக்கத் தெரியுமா?'' என்றார்.

''கொஞ்சம் கொஞ்சமா கத்துக்கிட்டேனுங்க!'' என்றான் அவன்.

''இதைப் படி!'' என்று அதை அவனிடம் கொடுத்துவிட்டு டாக்சியில் ஏறிச் சென்று விட்டார். நிறைந்த வயிறுடனும் ஆனந்த மனத்துடனும் தன் இருக்கையில் அமர்ந்தான் சாபாஸ்டியன். சிங்கிள் டீக்காக ஏங்கியவன் ஞாயிறு கோயில் உண்டிக்குக் காசு அனுப்பி விட்டான். பாதிரியார் கொடுத்த சிறிய புத்தகம் அவனை மேலும் மேலும் சந்தோஷப்படுத்திக் கொண்டிருந்தது. டீ சாப்பிட வேண்டும் என்று நடுங்கிக் கொண்டிருந்ததையும் மறந்தான். இருந்தும் குளிர் விடவில்லை.

மழைத் தூற்றல் வலுக்க ஆரம்பித்தது. புத்தகத்தைத் திறந்து பார்த்தான். சின்னஞ்சிறிய எழுத்துக்களில் விவிலிய நூல் உருவாகியிருந்தது. அவனுடைய ஆசைப்படி அப்படியொரு புத்தகம் கிடைத்ததைப் புண்ணியமாகக் கருதினான்.

திறந்த பக்கத்தை மெள்ள உற்று நோக்கியவன் எழுத்துக் கூட்ட ஆரம்பித்தான்.

''நான்... இன்றைக்கு... உ...ன் வீட்டில் தங்க வேண்டும்......'' என்று திக்கித் திணறிப் படித்துவிட்டான்.

'ஆ! சேகநாத சுவாமி என் வீட்டில் தங்க வேண்டுமாமே' என்று மனத்துக்குள் பேசிக் கொண்டான்.

'இருக்கலாம்! இன்று ஞாயிற்றுக்கிழமை. அதுவும் முதன் முதலாகச் சாமியார் வந்து போனார். சேக வருவார்' என்று துடிதுடித்தான் சாபாஸ்டியன்.

'ஐயோ, நம்ம வீட்டுக்கு வந்தால்....! நான் இந்த மரத்தடியில் அல்லவா இருக்கிறேன்! அவர் நம் வீட்டைப் பார்த்துவிட்டுப் போனாலும் போய்விடுவார்.'

சாபாஸ்டியன் மனத்தைக் குழப்பிக் கொண்டான். கையில் விரித்து கிடந்த சிறிய புத்தகம் அப்படியே இருந்தது. மறுபடியும் படித்தான்.

'நான் இன்றைக்கு உன் வீட்டில் தங்க வேண்டும்.'

வெளியில் எடுத்த சாமான்களை அழுக்குப் பையில் திணித்துக் கொண்டான். ஓட்டமும் நடையுமாக வீட்டை நோக்கிப் பறந்தான் சாபாஸ்டியன்.

மழை சோவெனப் பெய்தது.

எதையும் பொருட்டாக எடுக்க அவனுக்கு நேரமில்லை. வீட்டைச் சேர வேண்டும் என்றே அவன் மனம் பாய்ந்து கொண்டிருந்தது.

முழுவதுமாக நனைந்துவிட்டான். தலை வழியே வழிந்த மழை நீரை ''பூ...! பூ...!'' என்று ஊதிக் கொண்டே நடந்தான்.

குளிர் சற்றுக் குறைந்துவிட்டதைப் போலிருந்தது. அவன்தான் முழுவதுமாக நனைந்துவிட்டானே!

அதோ அவன் வீடு வந்துவிட்டது. அரசாங்க ஆபீஸ் சுவரின் ஒருபுறத்தில். ஓட்டைத் தார்ப் பாய்களை அப்படியும் இப்படியுமாக இழுத்துக் கட்டியிருந்தான். அங்குமிங்குமாக ஓலைகள் செருகப்பட்ட கூரை. அப்போது அடித்த மழை அவன் வீட்டுக்குள்ளும் புக நினைத்துச் சீறிக் கொண்டிருந்தது. காற்றின் வேகம் குறைந்து விட்டதால் அந்தக் கூரை தப்பித்துக் கொண்டது.

உள்ளே நுழைந்தவன் தலையை மட்டும் கந்தல் துணியால் துவட்டிக் கொண்டான். அணிந்த ஆடைகளைக் கழற்றாமல் தட்டி விட்டுக் கொண்டு மூலையில் கிடந்த கல் அடுப்பில் காகிதங்களையும் குப்பைகளையும் கொளுத்தித் தீ வளர்த்தான். குளிர் காய உட்கார்ந்துவிட்டான்.

பாதி நனைந்த சிறிய புத்தகம் அவன் கையில் இன்னும் இருந்தது. அடிக்கொரு தரம் அதே பக்கத்தைப் பார்த்துக் கொண்டான்.

சேகநாதர் இன்று அவன் வீட்டுக்கு வருவாராம்! எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

வந்தால் அவருக்குக் கொடுக்க என்ன இருக்கிறது என்று பார்த்தான். ஒன்றுமேயில்லை.

அரை மணி நேரத்தில் மழை நின்றது. அவனுக்கொரு யோசனை உதயமாகியது. விடுவிடென வெளியே ஓடினான். கையிலிருந்த ஐந்து பைசாவுக்கு டீ பொட்டலம் ஒன்று வாங்கிக் கொண்டு திரும்பி வந்தான்.

செத்தைகளையும், குப்பைகளையும் போட்டு ஊதி ஊதி எரியவிட்டுச் சின்ன அலுமினியப் பாத்திரத்தில் தண்ணீரை ஊற்றி வைத்தான். பையைத் தேடி ஒரு பொட்டலத்தை எடுத்தான். கோலிக்குண்டு அளவுக்கு என்றே எடுத்து வைத்த வெல்லம் இருந்தது. அது வெந்நீரில் போய் விழுந்தது. கொதி எடுக்கும் வரை அடிக்கடி அந்தச் சிறிய புத்தகத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டான்.

சேக இன்றைக்கு வருவாராம். மழை ஓய்ந்து மறுபடியும் இடிஇடிக்க ஆரம்பித்து விட்டது. சிலுவையை மீண்டும் மீண்டும் எடுத்து நெற்றியில் ஒற்றிக் கொண்டான்.

வெள்ளித்திரையின்
அந்த நாள் முதலாய்
நாங்கள் பெருமளவில் மாறிவிட்டோம்

நீங்கள்?

பின்னி
ஷர்ட்டிங்குகள்,
உடுப்புத் துணிகள்:
விண்வெளி
யுகத்தின்
எண்ணற்ற
வகைகள்.

காலத்திற்கேற்ற கோல நடை,
இன்றைய நாகரீகத்தின்
எல்லைக்கோடு



பின்னி

TERENE இழைந்தது

# ஒப்பற்ற விம் பளபளப்பு உங்களுக்கு இப்போது 55 பைசா பேக்கெட்டிலே

நீங்கள் அறிந்த விம். பிசுக்கோ, கீறலோ, கசடோ எதனையுமே அணுவளவும் படிய விடாத அதே நுரைவளம், அதே அபார சக்தி. வந்துவிட்டது இன்று கையகலப் பேக்கெட்டிலே. துலக்கிப் பாருங்கள் எவர்ஸில்வர் பாத்திரங்களை— ஒரே ஒரு பேக்கெட விம், நூற்றுக்கு மேற்பட்ட பாத்திரங்களைப் பளிச்சிட வைக்கும் <u>ஒப்பற்ற</u> ஒளிமயமாக— இத்தனைக்கும் 55 பைசாதான்.

Vim
with super foaming action
Cleans shining bright

**மாசில்லாத பளபளப்பை விசிட வைப்பது விம்**

தேர்ந்தெடுத்த ஒரு சில நகரங்களில் மட்டுமே கிட்டும்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

மையும் ஆறிப் போய் மூலையில் கிடந்தது. சேக இன்னும் வரவில்லையே !

மறுபடியும் மழை தொடங்கிவிட்டது. காற்றும் கலந்து வீதியில் மழை நீரை எங்கோ வீசிக் கொண்டிருந்தது.

சாபாஸ்டியன் மூலையில் உட்கார்ந்து ஓட்டை வழியே தெருவைப் பார்த்துக்கொண்டிருந்தான். அங்கே ஒரு வேப்ப மரம் காற்றில் பயங்கரமாகத் தலையாட்டிக் கொண்டிருந்தது.

அதனடியில்...யார் அங்கே? சாபாஸ்டியன் எட்டிப் பார்த்தான். ஐயோ பாவம்! யாரோ ஒரு பெண்மணி கந்தல் துணியில் குழந்தை ஒன்றை மூடி மறைத்து மழைக்கும் சாரலுக்கும் தப்பிக்க முயன்று கொண்டிருந்தாள். சுழன்றடிக்கும் காற்று அவளை விடாமல் விரட்டிக் கொண்டிருந்தது.

''சேக, இன்னும் வரவில்லையே !'' என்று ஏங்கிக் கொண்டிருந்த சாபாஸ்டியன் அதை மறந்தான். ஓட்டை வழியே பார்த்தவன் விழியை அசைக்காமல் அந்தப் பெண்ணையே பார்த்தான்.

அவள் தவித்துக் கொண்டிருந்தாள். 'சேகவே' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

திடீரென்று ஓலைக் கதவு திறந்து கொண்டது. திரும்பிப் பார்த்தான் சாபாஸ்டியன். அந்தப் பெண் குழந்தையுடன் வாசலில் நின்றாள். ''உள்ளே வாம்மா !'' என்று வரவேற்றான்.

வந்தவள் மேற்கூரையைப் பார்த்தாள். வேப்ப மரத்துக்கு இது தேவலை என்று சற்று ஆறுதல் அடைந்தாள்.

சாபாஸ்டியன் கோணிகளை அடுக்கிக் குழந்தையை வாங்கி அதில் படுக்க வைத்தான். அந்தக் குளிரிலும் அயர்ந்த தூக்கம் அந்தக் குழவிக்கு !

கந்தல் வேட்டி ஒன்றைக் கொடுத்துத் தலையைத் துடைத்துக் கொள்ளச் சொன்னான்.

மறுபடியும் மூன்று கல் அடுப்பை மூட்டிக் காகிதங்களைப் போட்டுக் கொளுத்தினான். நீண்ட ரப்பர் ஒன்றைத் தீப் பிடிக்கச் செய்தான். அது எரிய ஆரம்பித்தது.

''இப்படி வந்து நீ காய் ! குளிர் குறையும்!'' என்று அந்தப் பெண்ணை அழைத்தான். அவளும் வந்து குளிர் காய்ந்தாள். மேலே மையும் கொதித்து வந்தது. அலுமினியக் கிளாசில் ஊற்றி அவளிடம் கொடுத்தான்.

ஆவலாய் வாங்கிப் பருகினாள்.

பாதி குளிர் மறைந்துவிட்டது. அவனும் கொஞ்சம் குடித்து வாயைச் சப்புக் கொட்டிக் கொண்டான்.

தணலில் கைநீட்டிச் சூடேற்றிக் கொண்டிருந்த அவளும் ஒன்றும் பேசவில்லை. அவனும் எதையும் கேட்கவில்லை. குளிர் அவர்களை அணுகவில்லை.

**ம**ழை துல்லியமாக ஓடி மறைந்துவிட்டது. காற்றும் கணிசமாகத் தன்னைக் குறைத்துக் கொண்டது. வானம் வெளுத்து வெயிலும் காயத் தொடங்கியது. வீதியில் ஓடும் மழை நீரின் வேகம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டிருந்தது.

**கவனக் குறைவு**

சுதந்திர தினத்தன்று வெளியான தபால் தலையில் இடது புறம் நேருவையும் வலதுபுறம் காந்தியையும் போட்டிருக்கிறார்கள். கீழே 'காந்தியும் நேருவும்' என்று எழுதியிருக்கிறார்கள். இது அயல் நாட்டுப் புதிய தலைமுறையைக் குழப்பாதா ?

-- ஸ்டேட்ஸ்மன் கடிதம்

## தாங்க்யூ!

**காசைக் கொடுத்து தாங்க்யூ பெறலாம் !**

காசு போட்டால் பொருட்களை விற்கும் மெஷின்கள் அயல்நாடுகளில் நிறைய உள்ளன. இப்பொழுது ஜப்பானில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள ஒரு மெஷின் பொருளையும் கொடுத்து 'தாங்க்யூ' என்றும் சொல்லுமாம் !

நியூஸ் வீக் --பாபு

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மூலையில் உட்கார்ந்து தன் சேய்க்குப் பாலூட்டிக் கொண்டிருந்த அந்தப் பெண் எழுந்து கொண்டாள். ஓட்டைப் பெட்டியின் மேல் அவன் வைத்திருந்த மரச் சிலுவையைப் பார்த்தவள் கைகூப்பி வணங்கினாள். சாபாஸ்டியனும் கையை மேலும் கீழும் ஆட்டி மார்பில் சிலுவையிட்டுக் கொண்டான். அவள் வெளியே சென்று வானத்தைப் பார்த்தாள். குழந்தையைத் தோளில் இடத்திக் கொண்டாள்.

ஏழ்மையிலும் வற்றாத புன்னகையை வரவழைத்துச் சாபாஸ்டியனுக்கு மரியாதை தெரிவித்தவள் வீதியில் நடந்தாள்.

சாபாஸ்டியன் உள்ளே சென்றவன் அந்தச் சிறிய புத்தகத்தை எடுத்துச் சடாரென விரித்தான். வேறு அதிகாரம் வந்தது.

எழுத்துக் கூட்டி வாசித்தான்: 'என் நிமித்தம் சிறியவர் எவருக்கும் நீங்கள்..... எதைச் செய்கிறீர்களோ அதை எனக்கே செய்கிறீர்கள்.'

''சேசுநாதரே !'' என்று பெருமூச்சோடு சொல்லிக் கொண்டான்.

சிலுவையைத் தொட்டு முத்தமிட்டுக் கொண்டான். காலையில் வந்த சாமியார் இருக்கும் கோயிலை அவன் அறிவான்.

தட்டிக் கதவைச் சாத்திக் கொண்டு வேகமாக நடந்தான்.

பாதிரியார் ஓய்வுடன் சாய்வு நாற்காலியில் அமர்ந்து விவிலிய நூலை வாசித்துக் கொண்டிருந்தார்.

அவரைத் தாழ்ந்து வணங்கிய சாபாஸ்டியன், ''சாமி! இன்னிக்கு என் வீட்டுக்குச் சேசுநாதர் வந்தார்!'' என்று சொல்லிக் கண்களில் நீர் மல்க நின்றான். பின்னர் திரும்பி நடந்தான்.

பாதிரியாருக்கோ ஒன்றுமே புரியவில்லை.

சிறிய விவிலிய நூலை அவன் தாங்கிச் செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தார்.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~









# சுவைமிக்க புட்டிங் தயாரிக்க 5 எளிய நிலைகள்:

■ ஒரு கிண்ணத்தில் 7 மேசைக் கரண்டி (தலை தட்டிய அளவு) பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடரையும், 3 மேசைக் கரண்டி (தலை தட்டிய அளவு) சர்க்கரையையும் போடவும். அரை லிட்டர் குளிர்ந்த பாலிலிருந்து சிறிதளவை அத்துடன் கலந்து விழுது போலாக்கவும் ■ மீதியுள்ள பாலை சூடாக்கவும் ■ அத்துடன் கஸ்டர்டு பவுடர் கலவையைச் சேர்த்து, கொதிக்கும் வரை கிளறவும் ■ ஒரு தேக் கரண்டி வெண்ணெ சேர்த்து விழுதாகும் வரை மரக் கரண்டியால் கிளறவும். ■ பின்னர் நெய்தடவிய அச்சில் கொட்டி, படிய விடவும்.

மென்மையிலும் வளமையிலும் மேலானது பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர். எப்போதும் கைவசம் வைத்திருந்தீர்களானால், ஃபிரினி, ஐஸ்க்ரீம், ட்ரைபின் போன்ற வித விதமான பழத் தின்பண்டங்களையும் புட்டிங்குகளையும் எளிதில் தயாரிக்க உதவும். ஜெல்லி அல்லது பழ சாலாடுடனோ, தேன் கலந்த உலர் பழங்களின் மீது ஊற்றியோ சாப்பிட்டால் சுவையாக இருக்கும். அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு பக்குவப் படுத்தப் பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச்சிறந்தது பிரவுன் & போல்ஸன். முட்டை கலவாதது. உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்

**பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடர்



இலவசம்! பிரவுன் & போல்ஸன் பக்குவ முறை நூல் கெ. 5. தயவு செய்து இன்றே ஒரு பிரதிக்கு எழுதுக: பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட்.
**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட்.**
ஸ்ரீனிவாஸ் ஹவுஸ்.எச். சோமானி மார்க், பம்பாய் 1.

CBM 9946 Tam

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

பதினைந்தாம் அத்தியாயம்

## ரதியின் தூது

குதிரை வந்த சத்தம் சிவகாமியின் செவியில் விழுந்தது. குதிரை நின்றதையும், அதன் மேல் வந்த வீரன் இறங்கித் தன்னை நோக்கி நடந்து வருவதையும் அவள் உணர்ந்தாள். வருகிறது இன்னார்தாம் என்பதை அவளுடைய நெஞ்சு அவளுக்கு உணர்த்தியது. இருந்தாலும் திரும்பிப் பார்த்துச் சந்தேகம் தீர வேண்டும் என்ற ஆவல் அளவில்லாமல் எழுந்தது. அந்த ஆவலைப் பலவந்தமாக அடக்கிக் கொண்டு, சிவகாமி சிலையைப் போல் அசையாமல் நின்று கொண்டிருந்தாள்.

குமார சக்கரவர்த்தி, மாமல்ல நரசிம்மர், கையில் பிடித்த வேலுடன் வந்து சிவகாமியின் அருகில் குளக்கரைப் படியில் நின்றார். குளத்தின் தெளிந்த நீரில் சிவகாமியின் உருவத்துக்குப் பக்கத்தில் நரசிம்மவர்மரின் உருவமும் புலப்பட்டது. அப்போதும் சிவகாமி அவரைத் திரும்பிப் பார்க்கவில்லை.

வீர சௌந்தரியம் குடிகொண்டு தேஜஸுடன் விளங்கிய நரசிம்மரின் நவ யௌவன முகத்தில் இலேசாகப் புன்னகை அரும்பியது. அவரும் சிவகாமியை நேராகப் பார்க்காமல், தண்ணீரில் பிரதிபலித்த அவளுடைய முழு மதி முகத்தை உற்று நோக்கினார்.

சிவகாமி சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு, அவளுக்கு இன்

றொரு பக்கத்தில் நின்ற மான்குட்டியைப் பார்த்து, ''ரதி! இவர் யார்? எதற்காக இங்கு வந்தார் என்று கேள்'' என்றாள்.

இதைக் கேட்ட நரசிம்மரின் முகத்தில் புன்னகை மறைந்தது. புருவங்கள் நெரிந்தன. அவரும் ரதியைப் பார்த்து, ''ரதி! உன் எஜமானி பரத கண்டத்திலேயே இணையற்ற பரத கலா ராணியாகி விட்டாள் அல்லவா? பழைய சிநேகத்தை நினைவு வைத்திருக்க முடியுமா? 'இவர் யார்?' என்று கேட்கத்தான் தோன்றும். இது ஒன்றும் எனக்கு ஆச்சரியமில்லை, ரதி!'' என்றார்.

சிவகாமி ஆத்திரம் நிறைந்த குரலில் கூறினாள்: ''ரதி! ஆச்சரியத்தையே அறியாதவரான சக்கரவர்த்தியின் திருக்குமாரருக்கு என்னுடைய ஆயிரம் கோடி நமஸ்காரத்தைச் சொல்லிவிட்டு இதையும் சொல்லு: அவரோ பூமண்டலாதிபதியின் புதல்வர்; தேச தேசங்களின் ராஜ ராஜாக்கள் எல்லாம் தம் திருப்பாதங்களில் விழுந்து வணங்கப் பெற்ற பிரபு; அப்பேர்ப்பட்டவருக்கும் இந்த ஏழைச் சிற்பியின் மகளுக்கும் சிநேகம் எப்படிச் சாத்தியம்? அந்த எட்டாத பழத்துக்கு ஆசைப்பட்டது என்னுடைய அறிவீனம்தான் என்பதை உணர்ந்து கொண்டேன் ரதி!''

மாமல்லர் பரிகாசம் தொனித்த குரலில் சொன்னார்: ''ரதி! உன் எஜமானிக்கு ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்து: பரத சாஸ்திர பண்டிதையான சிவகாமிதேவி இப்போது ஆடரங்கத்தில் நிற்கவில்லை; அபிநயம் பிடிக்கவில்லை. நிருத்தம், நிருத்தியம், ஹஸ்தம், அபிநயம் ஆகியவைகளைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்துவிட்டு, என்னிடம் கொஞ்சம் சுபாவிகமாகப் பேசச் சொல்லு!''

இயற்கையில் செவ்வரியோடிய சிவகாமியின் கண்கள் இப்போது கோபத்தினால் கோவைப் பழம் போல் சிவந்தன.

''ஆமாம் ரதி, ஆமாம்! நான் நடன அரங்கத்தில் நடிக்கும் நாடகக்காரிதான். காஞ்சிச் சக்கரவர்த்தியின் திருக்குமாரர் எங்கே? ஆயனச் சிற்பியின் மகள் எங்கே? மாமல்லரின் அருளைப் பெறுவதற்கு அரண்மனையிலும் அந்தப்புரங்களிலும் வளரும் எத்தனையோ இராஜகுமாரிகள் தவம் கிடக்கிறார்கள்! அரங்க மேடையில் ஏறி ஆடும் இந்த ஏழைப் பெண்ணின் ஞாபகம் அவருக்கு எப்படி இருக்கும்?'' என்று சிவகாமி சொன்னபோது, அவளுடைய குரல் தழுதழுத்தது; அவளுடைய கண்களில் நீர் துளித்தது.

நரசிம்ம வர்மர் மனம் கனிந்தவராய் அன்பு ததும்பிய குரலில், ''சிவகாமி! ஏன் இப்படி யெல்லாம் பேசுகிறாய்? இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு நான் உண்மையில் தலைவனாகும்போது, அரங்க மேடையில் சதங்கை ஒலிக்க ஆடும் உன் அழகிய பாதங்களுக்கு அந்தப் பதவியை அர்ப்பணம் செய்வேன். என் உள்ளம் உனக்குத் தெரியாதா?'' என்றார்.

இதனாலும் சிவகாமியின் மனம் மாறவில்லை. மீண்டும் அவள் மான்குட்டியையே பார்த்தவளாய், ''ரதி! கதைகளிலும் காவியங்களிலும் புருஷர்களுடைய நயவஞ்சகத்தைப் பற்றி எவ்வளவோ கேட்டு அறிந்திருக்கிறேன். ஆனால் அவர்களில் யாரும் காஞ்சிக் குமாரச் சக்கரவர்த்திக்கு இணையாக மாட்டார்கள்'' என்றாள்.

நரசிம்ம வர்மருக்கு இப்போது உண்மையாகவே கோபம் வந்ததென்று அவருடைய புருவங்களின் நெரிப்பிலிருந்து தெரிந்தது.

''சிவகாமி! ஏன் இன்றைக்கு இவ்விதம் மாறிப் போயிருக்கிறாய்? எவ்வளவோ ஆசையுடன் நான் உன்னைத் தேடி வந்தேன். எவ்வளவோ விஷயங்கள் பேச எண்ணியிருந்தேன். நான் வந்ததே உனக்குப் பிடிக்கவில்லை என்று தோன்றுகிறது. இதோ போகிறேன்'' என்று ஓர் அடி எடுத்து வைத்தார்.

அப்போது சிவகாமி விம்மிய குரலில், ''ரதி! அவர் போகிறதாயிருந்தால் போகட்டும். ஆனால் குற்றத்தை என் பேரில் சுமத்திவிட்டுப் போக வேண்டாமென்று சொல்லு!'' என்றாள்.

நரசிம்மர் மேலே அடி எடுத்து வைக்காமல் நின்று, ''நான்தான் என்ன குற்றம் செய்து விட்டேன்? அதைச் சொல்லி விட்டுக் கோபித்துக் கொண்டால் மிகவும் நன்றாயிருக்கும்'' என்றார்.

சிவகாமி பெண் சிங்கத்தைப்போல் கம்பீரமாக அவரைத் திரும்பிப் பார்த்து, ''என்னுடைய நடனக் கலையைப் பற்றி எப்படியெல்லாம் பாராட்டிப் பேசினீர்கள்! எவ்வளவெல்லாம் முகஸ்துதி செய்தீர்கள்! அப்படியெல்லாம் பேசிவிட்டு, என் அரங்கேற்றத்துக்கு ஏன் வராமல் இருந்தீர்கள்?'' என்று கண்களில் கனல் பறக்கக் கேட்டாள்.



நரசிம்மர் 'கலகல'வென்று சிரித்து, ''இதை முன்னமேயே கேட்டிருக்கக் கூடாதா? நான் அரங்கேற்றத்துக்கு வரவில்லை என்று உனக்கு யார் சொன்னது? மேல் உப்பரிகையில் என் தாய்மார்களோடு உட்கார்ந்து பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். அவர்களுக்குப் பரத சாஸ்திர நுட்பங்களைப் பற்றி அவ்வப்போது எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தேன். நான் சபையில் நேரில் வந்து உட்கார்ந்தால், ஒருவேளை உன் ஆட்டத்துக்குப் பங்கம் விளையுமோ என்று பயந்தேன். இதற்காக இவ்வளவு ஆர்ப்பாட்டமா?'' என்று கேட்டபோது சிவகாமியின் முகத்தில் அதுவரை காணப்படாத மகிழ்ச்சியும் மலர்ச்சி



யும் தோன்றின. நரசிம்மவர்மரை ஆர்வத்துடன் நோக்கி, "இதை ஏன் முன்னமே நீங்கள் சொல்லவில்லை?" என்று கேட்டாள்.

"சொல்லுவதற்கு நீ இடம் கொடுத்தால்தானே? இன்னும் எவ்வளவோ சொல்ல வேண்டியிருக்கிறது. உன்னுடைய சிம்மாசனத்தில் உட்கார்ந்து பேசலாம், வா!" என்று கூறி நரசிம்மர் குளக்கரையின் மரத்தடியில் அமைத்திருந்த பலகையைப் பார்த்தவாறு சிவகாமியின் கரத்தைப் பிடித்து அழைத்துப் போக யத்தனித்தார். சிவகாமியோ அவர் பிடித்த கையைச் சட்டென்று இழுத்துக் கொண்டு, மானைப் போல் துள்ளிக் கரைமீது ஏறினாள்.

அவர்கள் இருவரும் போய் மரத்தடியில் போட்டிருந்த பலகையில் உட்கார்ந்ததை ரதி தலைநிமிர்ந்து பார்த்துக்கொண்டிருந்தது. இனி நம்முடைய தூது இவர்களுக்குத் தேவையில்லை என்பதைத் தெரிந்து கொண்டது போல், அது குளத்தோரமாகக் 'கருகரு'வென்று வளர்ந்திருந்த பசும் புல்லை மேயச் சென்றது.

### பதினாறாம் அத்தியாயம்

## தடைப்பட்ட திருமணம்

**ப**லகையில் உட்கார்ந்த பிறகும் சிவகாமி வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டிருப்பதைப் பார்த்த நரசிம்மர், "இன்னும் என்ன கோபம், சிவகாமி? இப்படி நீ பிடிவாதம் பிடிக்கும் பட்சத்தில் என்னிடம் உனக்குப் பிரியம் இல்லை என்றுதான் எண்ணிக் கொள்ளுவேன்" என்றார்.

சிவகாமி உடனே திரும்பி, நரசிம்மரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "உங்களுக்கு மட்டும் என்னிடம் பிரியம் இருக்கிறதா? இருந்தால், இந்த மூன்று நாட்களாக என்னுடைய ஞாபகம் இல்லாமற் போனது ஏன்?" என்று கேட்டாள்.

"இந்த மூன்று தினங்களாக நானும் உன்னைப் பார்க்க வரவேணுமென்று துடித்துக் கொண்டுதான் இருந்தேன். ஆனால், முக்கியமான இராஜாங்க வேலைகள் குறுக்கிட்டன. அன்றைக்கு உன்னுடைய அரங்கேற்றத்தை நடுவில் முடிக்கும்படி நேர்ந்தது ஏன் என்று உனக்குத் தெரியாதா? பல்லவ சாம்ராஜ்யத்தில் பல வருஷங்களாக இல்லாத பெரிய யுத்தம் வந்திருக்கிறது..."

இவ்விதம் நரசிம்மர் சொல்லி வந்தபோது சிவகாமி குறுக்கிட்டு, "நானும் கேள்விப்பட்டேன். யுத்தம் வந்துவிட்டதே என்று நினைத்து நினைத்துக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தீர்களாக்கும்!" என்றாள்.

"கவலையா? ஒருநாளும் இல்லை, சிவகாமி! பல்லவ குலத்தில் பிறந்தவர்கள் யுத்தம் வந்துவிட்டதே என்று கவலைப்பட மாட்டார்கள்; குதூகலப் படுவார்கள். என் பாட்டனார் சிம்மவிஷ்ணு மகாராஜாவின் காலத்திலிருந்து பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்தம் நேரவில்லை. பல்லவ சேனாவீரர்களின் கையில் வேல்களும் வாள்களும் துருப்பிடித்து வந்தன. இப்போது அவற்றுக்கு கெல்லாம் வேலை வந்திருக்கிறது. போர்க்களத்திலே ஆயிரக்கணக்கில் மின்னிப் பாயும் வேல்களையும், வாள்களையும் கண்டு பயப்படுகிறவன் நான் அல்ல. ஆனால், உன்னுடைய கரிய



விழிகளிலிருந்து கிளம்பிப் பாயும் வாள் களையும் வேல்களையும் கண்டுதான் அஞ்சுகிறேன் !''

சிவகாமி தன்னை மீறி வந்த புன்முறுவலை அடக்கிக் கொள்ள முடியாதவளாய், ''புருஷர்களே இப்படித்தான் போலிருக்கிறது. சாதுர்யமாயும் சக்கர வட்டமாயும் பேசி உண்மையை மறைக்கப் பார்ப்பார்கள்'' என்று முணுமுணுத்தாள். ஆனாலும், அந்த வார்த்தைகள் நரசிம்மரின் காதில் விழாமற் போகவில்லை.

''பழி மேல் பழியாகச் சுமத்திக் கொண்டிருக்கிறாயே? எந்த உண்மையை நான் மறைக்கப் பார்த்தேன்?'' என்று மாமல்லர் கேட்டார்.

''பின்னே, நீங்கள் யுத்தத்துக்குப் பயப்படுகிறவர் என்று நான் சொன்னேனா? நீங்கள் வீராதி வீரர், சிம்ம விஷ்ணு மகாராஜாவின் பேரர், மகேந்திர சக்கரவர்த்தியின் குமாரர் என்பதெல்லாம் எனக்குத் தெரியாதா? 'இந்த யுத்தம் வந்ததனால் திருமணம் தடைப்பட்டுவிட்டதே, அதைப் பற்றிக் கவலைப்படுகிறீர்களாக்கும் என்றுதானே சொன்னேன் ?''

இவ்விதம் சிவகாமி கூறியபோது, அவளுடைய முகத்தில் நாணத்துடன் கோபம் போராடியது. நரசிம்மர் வியப்புடன், ''சிவகாமி! என்ன சொல்லுகிறாய்? திருமணம் தடைப்பட்டுவிட்டதா? யாருடைய திருமணம்?'' என்று கேட்டார்.

''ஓகோ ! உங்களுக்குத் தெரியவே தெரியாது போலிருக்கிறது. நான் சொல்லட்டுமா? காஞ்சிமா நகரத்தில் மகாராஜாதிராஜ திரிபுவன சக்கரவர்த்தி மகேந்திரவர்ம பல்லவர் இருக்கிறாரோ, இல்லையோ? அந்தச் சக்கரவர்த்திக்குத் தேசமெல்லாம் புகழ் பெற்ற மாமல்லர் என்னும் இருக் குமாரர் ஒருவர் உண்டு. அந்தக் குமார சக்கரவர்த்திக்குத் திருமணம் பேசி வருவதற்காக மதுரைக்கும், வஞ்சிக்கும் இன்னும் வட தேசத்துக்கும் தூதர்களை அனுப்ப ஏற்பாடாகியிருந்ததாம். அப்பேர்ப்பட்ட சமயத்தில் யாரோ ஒரு பொல்லாத அரசன் பல்லவ ராஜ்யத்துக்குள் படையெடுத்து வரவே கல்யாணத்தைத் தள்ளிப் போட வேண்டியதாகிவிட்டது. இதெல்லாம் தங்களுக்குத் தெரியாதல்லவா?'' என்றாள் சிவகாமி.

நரசிம்மர் 'கலகல'வென்று சிரித்துவிட்டு, ''இதற்குத்தானா இவ்வளவு பாடுபடுத்தினாய்? நான் பயந்து போய் விட்டேன். உனக்குத்தான் ஒருவேளை ஆயனர் திருமணம் நிச்சயம் செய்துவிட்டாரோ என்று ! அப்படி ஒன்றும் இல்லையே ?'' என்றார்.

சிவகாமி கண்களில் கபடக் குறும்பு தோன்ற அவரைப் பார்த்து, ''ஏன் இல்லை? என் தந்தைகூட அடிக்கடி என் கல்யாணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டுதான் இருக்கிறார். அவரிடம் சிற்ப வேலை கற்றுக் கொள்ளும் கெட்டிக்காரச் சிட்ப பிள்ளை ஒருவனைப் பார்த்து என்னை மணம் செய்து கொடுக்கப் போகிறாராம்'' என்றாள்.

''ரொம்ப சந்தோஷம். உன் தந்தை நிஜமாக அப்படிச் சொன்னாரா! அவரை உடனே பார்த்து என்னுடைய நன்றியை அவருக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டும்'' என்று நரசிம்மர் கூறிய மறுமொழி சிவகாமியைத் திடுக்கிடச் செய்தது. அவள் தொடர்ந்து, கலக்கமுற்ற குரலில், ''ஆனால், நான் அதற்குச் சம்மதிக்கவில்லை. 'எனக்குக் கல்யாணமே வேண்டாம்; நான் புத்த பிக்ஷுணி ஆகப் போகிறேன்' என்று



அப்பாவிடம் சொல்லி விட்டேன்'' என்றாள்.

''என்ன? நீயா புத்த பிக்ஷுணி ஆகப் போகிறாய்? ஆயனர் மகளா இப்படிப் பேசுகிறது? சிவபெருமானும் திருமாலும் உனக்கு என்ன தீங்கைச் செய்தார்கள்? சிவகாமி! நம் திருநாவுக்கரசர் பெருமானின் தேனினும் இனிய சைவத் திருப் பாடல்களை நீ கேட்டிருக்கிறாயே? 'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும்' என்ற தெய்விகப் பாட்டுக்கு அபிநயங்கூடப் பிடித்தாயே? அப்படியிருந்தும், புத்த பிக்ஷுணியாக வேண்டும் என்ற எண்ணம் உன் மனத்தில் எப்படி உதித்தது?'' என்று நரசிம்மர் சரமாரியாகப் பொழிந்தார்.

''எனக்குச் சிவன்பேரிலும் திருமாலின் பேரிலும் வெறுப்பு ஒன்றுமில்லை. கல்யாணத்தின் பேரிலேதான் வெறுப்பு. புத்த பிக்ஷுணியாகி, நான் தேச யாத்திரை செய்யப் போகிறேன்'' என்று சிவகாமி தலை குனிந்தவண்ணம் கூறினாள்.

''சிவகாமி! அந்த மாதிரி எண்ணமே உனக்குத் தோன்றியிருக்கக் கூடாது. மகாமேதாவியான உன் தந்தையின் பேச்சை நீ தட்டலாமா? அவருடைய விருப்பத்தின்படி அவருடைய சீடர்களில் மிகவும் கெட்டிக்காரன் எவனோ, அவனை நீ மணம் புரிந்துகொள்ளத்தான் வேண்டும்'' என்று நரசிம்மர் கடுமையான குரலில் சொன்னார்.

''என்னை எந்த அசட்டுப் பிள்ளையின் கழுத்திலாவது கட்டிவிடுவதில் உங்களுக்கு என்ன அவ்வளவு சிரத்தை?



அரண்மனையில் பிறந்து வளர்ந்த அரசிளங் குமரியை நீங்கள் மணந்து கொள்வதை நான் குறுக்கே நின்று தடுக்கவில்லையே?'' என்றாள் சிவகாமி. அவளுடைய கண்களில் நீர் ததும்பி நின்றது.

''ஜாக்கிரதை, சிவகாமி! அசட்டுப் பிள்ளை என்று யாரைச் சொன்னாய்? உன் தந்தையின் சீடர்களுள் ரொம்பக் கெட்டிக்காரன் யார் என்பது உனக்குத் தெரியாதா? ஆயனர் எத்தனையோ தடவை 'குமார சக்கரவர்த்திக்குச் சிற்பக் கலை வருவதுபோல் வேறு யாருக்கும் வராது' என்று சொல்லியதில்லையா? ஆயனர்களின் சீடர்களில் மிகவும் கெட்டிக்காரனுக்கு உன்னை மணம் செய்து கொடுப்பதாயிருந்தால் எனக்குத்தானே கொடுக்க வேண்டும்? அதற்காக உன் தந்தைக்கு நான் நன்றி செலுத்த வேண்டாமா?'' என்று நரசிம்மர் கூறியபோது, அவருடைய முகத்தில் குறும்பும் குதூகலமும் தாண்டவமாடின.

சிவகாமியோ சட்டென்று பலகையிலிருந்து எழுந்து நின்றாள். ''பிரபு! இந்த ஏழைப் பெண்ணுக்கு ஏன் வீண் ஆசை காட்டுகிறீர்கள்.....?'' என்று கூறி, மேலே பேச முடியாமல் விம்மி அழத் தொடங்கினாள்.

நரசிம்மவர்மர் அவளுடைய கரங்களைப் பிடித்து மறுபடியும் பலகையில் தம் அருகில் உட்கார வைத்துக் கொண்டு, ''சிவகாமி! என்னை நீ இன்னும் தெரிந்து கொள்ளவில்லையா? இப்படி நீ கண்ணீர் விடுவதைப் பார்க்கும்போது....'' என்று கூறுவதற்குள், சிவகாமி விம்மிக் கொண்டே, ''பிரபு! இது ஆனந்தக் கண்ணீர்! துயரக் கண்ணீர் அல்ல!'' என்றாள்.

(தொடரும்)



கூட்டுறவே ! நாட்டுயர்வு !!

# கண்கவர் காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள்

## பாவாடை, ரவிக்கை ரகங்களுக்கு

விஜயம் செய்யுங்கள்

# காஞ்சிபுரம் ஸ்ரீ வரதராஜஸ்வாமி பட்டு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி விற்பனை சங்கம் லிமிடெட் - No. G. 2105

**437, காந்தி ரோட், காஞ்சிபுரம் - 1.** போன் : **627**

**R. வாசுதேவமூர்த்தி**
(கூட்டுறவு உப பதிவாளர்,
செயலர்

**K. N. ராமுடு**
தலைவர்

# அருள்மிகு பூவராகஸ்வாமி திருக்கோயில்

## ஸ்ரீமுஷ்ணம்



சிதம்பரம் வட்டத்திலுள்ள ஸ்ரீ முஷ்ணம் எட்டு ஸ்வயம்வக்த ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்ரங்களில் ஒன்று என்பது பிரசித்தம். இங்கே எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ பூவராக ஸ்வாமியின் அருளுக்கு ஹிந்து மதத்தினரைத் தவிர, முஸ்லிம் சகோதரர்களும் திரளாக வந்து சேவை செய்வது தனி விசேஷம். உத்ஸவ மூர்த்தி ஸ்ரீயக்ஞ வராக ஸ்வாமிக்கு இன்னே தர்காவில் பிரத்யேக பூஜைகள் இன்னும் நடைபெற்று வருகின்றன.

விஜயநகர மன்னர்கள் காலத்தில் அமைக்கப்பட்டு பின்னர் முகம்மதிய சக்கரவர்த்திகளால் ஆதரிக்கப்பெற்ற இந்தத் திருக்கோயில் சென்ற முந்நூறு ஆண்டுகளாக — திருப்பணியின்றி பழுதடைந்திருக்கிறது. இதைப் புதுப்பிக்கும் திருப்பணிக்கு சுமார் மூன்று லட்சம் ரூபாய்கள் செலவாகும் என்று திருப்பணிக் கமிட்டியால் உத்தேச மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. பெரிய காரியம், பல பக்தர்கள் சேர்ந்து தங்களாலியன்ற அளவு பொருளுதவி அளித்து ஸ்ரீ பூவராகஸ்வாமியின் அருளுக்குப் பாத்திரர்களாக வேண்டுமென்று திருப்பணிக் கமிட்டியினர் கேட்டுக் கொள்கின்றனர்:

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி: **செயலாளர், திருப்பணிக்குழு, அருள்மிகு பூவராகஸ்வாமி தேவஸ்தானம், ஸ்ரீமுஷ்ணம், சிதம்பரம் வட்டம் (தென்னார்க்காடு மாவட்டம்) தமிழ்நாடு** என்ற முகவரிக்கு அனுப்பிவைக்கக் கேட்டுக்கொள்கிறோம்.

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 பிப்ரவரி, 25உ**

சனிக்கிழமை. நெல்லூரிலிருந்து சில நண்பர்கள் வந்துள்ளனர். இன்னும் சிலர் திருச்சி சிறையிலிருந்து மாற்றப் பட்டு வருவார்கள் என்று தெரிகிறது.

எங்களுக்கென்று ஒதுக்கி விடப்பட்ட அறைகள் எல்லாம் அநேகமாக நிறைந்து போய்விட்டன. என்னுடைய அறைக்குத் தெற்கேயுள்ள ஒன்பது அறைகளிலும் கண்ணனூர் சிறையில் நேர்ந்த கலகத்தில் சம்பந்தப்பட்ட ஒன்பது மாப்பிள்ளைமார்க் கைதிகளை அடைத்து வைத்திருக்கிறார்கள். காட்டு மிராண்டித்தனத்துக்கு முதல்தரமான சின்னமாக விளங்கும் கைவிலங்கு கால் விலங்குகளை அவர்களுக்குப் போட்டிருந் தார்கள். சில நாட்கள் கழிந்த பிறகு அவைகளை நீக்கி விட்டார்கள்.

இன்று காலை சிறையின் தலைமை அதி காரியும் சின்ன டாக்டர்களும் என் அறைக்கு வந்தார்கள்.

சிறைத் தலைமை அதிகாரி என்னைப் பார்த்து, ''தாங்கள் திரு காந்திக்கு எழுதிய கடிதம் அவருக்குப் பய பீதியை உண்டாக்கியிருக்கிறது. அதைக் குறித்து அவர் தமது 'யங் இந்தியா' பத்திரிகை யில் ஒரு குறிப்பு எழுதியிருக்கிறார். வேறு எங்கோ உள்ள துரதிர்ஷ்டசாலியான ஒரு கைதியின் நிலைமையுடன் தங்கள் நிலைமையை ஒப்பிட்டு அவருக்குப் பத்தி ரிகை கொடுப்பதாகவும், தங்களுக்குக் கொடுக்காததாகவும், இதுபோல் பல குறைகளை எழுதி யிருக்கிறார்'' என்றார்.

''அந்தக் குறிப்பை நான் பார்க்க லாமா?'' என்று நான் கேட்டேன்.

''என்னிடம் அந்தப் பத்திரிகை இல்லை'' என்று பதில் உரைத்தார்.

அப்படியானால் அவருக்கு இந்த விஷயம் எப்படித் தெரிந்தது என்பது எனக்கு விளங்கவில்லை.

என்னுடைய சிறைக்குப் பின்புற முள்ள சிறையில் தூக்குத் தண்டனை விதிக்கப்பெற்ற கைதியான சிப்பாய் மிக்க மனவேதனையுடன் இருப்பதுபோல் தோன்றிற்று. நேற்று முன் தினம் இரவு வெகு நேரம் வரையில் அவர் ஸ்தோத் திரப் பாடல்கள் பாராயணம் செய்து கொண்டிருந்தார். கடவுள் அருள் கிடைக்கும் என்று தம்முடைய ஆன்மா வுக்கு உறுதி கூறினார். கடவுளிடம் அனைத்தையும் ஒப்படைத்து விட வேண் டும் என்றார். தம்முடைய அறைக்குப் பக்கத்து அறையிலுள்ள ராமா ரெட்டிக் குத் தைரியம் கூறினார். கடைசியாக அவரிடம், ''என்ன தம்பி! தைரியம் வேண்டாமா? யமன் என்றால் தைரிய மாக வரவேற்க வேண்டாமா? இனி மேலும் நீர் தைரியமாக இல்லாவிட்டால் நான் உம்மிடம் பேசப் போவதில்லை'' என்று கூறி முடித்தார்.

இன்று உணவு உண்ண மறுத்துவிட் டார். ''எனக்கு அரிசிச் சாதம் தாருங்கள். அல்லது என்னைத் தூக்கி விடுங்கள்'' என்றார்.

''கருணை காட்டும்படி சர்க்காருக்கு மனுச் செய்யப் போவதில்லை. அப்படியி ருக்க ஏன் எனக்குக் கேழ்வரகு ரொட்டி போட்டுக் கஷ்டப்படுத்துகிறீர்கள்?'' என்று கேட்டார்.



எனக்கும் விளங்கவில்லை. தூக்குத் தண்டனை அடையப் போகும் ஒருவர் அரிசிச் சாதம் கேட்டால் கொடுக்கக் கூடாதோ? அவர் பிரமாதமாக வேறு எவ்வித சௌகரியங்களையும் கேட்க வில்லையே? ஜெய்லரிடம் கூறினேன். 'ஆகட்டும், அரிசிச் சாதம் கொடுக்கச் சொல்கிறேன்' என்றார். அவர் அப்படியே செய்வாரென்று திடமாக நம்புகிறேன்.

என் நண்பர் அல்லாடி வந்திருந்தார். நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந் தோம். ஒத்துழையாமைக்காரர் அதிக மாக உள்ள கட்டடத்துக்குச் சென்று அங்குள்ள அனைவரையும் பார்த்தோம். அப்போது நம்முடைய நண்பர்கள் தைரி யமாகச் சிரித்துக் கொண்டு வெளியே வந்து நின்றது எனக்கு மகிழ்ச்சியா யிருந்தது.

"அன்புள்ள நிர்மல்,

என்னிடமிருந்து இப்படி ஒரு கடிதம் வருவது உனக்கு ஆச்சரியமாக இருக்கலாம். அதுவும் இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு கடிதத்தை நீ நிச்சயமாக எதிர்பார்த்திருக்கமாட்டாய். ஆனால் சில விஷயங்கள் எதிர்பாராமல் நடைபெறும் போதுதான் நெஞ்சில்—பூவிதழ்கள் சொரிவதுபோல், ஒரு மென்மையான மகிழ்ச்சியை உண்டாக்குகின்றன.

இப்படி ஒன்று வாழ்க்கையில் எப்போதாவதுதான் நேருகிறது. ஆனால் இது உன் வாழ்க்கையில் மகத்தான நேரம். இன்னும் ஒரு வாரத்தில் உன் திருமணம் நடைபெற இருக்கிறது. உனக்குச் சிந்திக்க அவகாசம் இருக்காது; பேசப் பொறுமை இராது. அதனால்தான் இந்தக் கடிதம்; சில எண்ணங்களை எழுத்தில்தாம் கோவையாகக் கொட்ட முடியும்.

இது ஒரு பழைய கதை. உனக்கு நினைவிருந்தால் அடையாளம் கண்டு கொள்ள முயன்று பார். அது வரையில் இந்தக் கடிதமே கடைசி வரை ஒரு புதிராக இருக்கலாம். அதுவும் ஓர் இனிய அனுபவம்தானே? கடைசிப் பக்கத்தைப் புரட்டிப் பார்த்துவிடாதே! சுவாரசியம் ஒளி மங்கிப் போகும்.

அந்த வாலிபனுக்கு அந்த அலுவலகம் புதிது. அவன் நன்றாகப் படித்தவன். பார்க்க நறுக்கான தோற்றம்—சூடிகையான பதில்—நயமாகப் பழகும் சுபாவம். இந்தப் பண்புகளுக்காகத்தான் அவனுக்கு அந்தக் கம்பெனியில் வேலை கிடைத்தது.

எல்லாவற்றையும் படிப்பு சொல்லிக் கொடுத்து விடுவதில்லை; அனுபவத்தில் தெரிந்து கொள்ள வேண்டியவை எத்தனையோ இருக்கின்றன. அந்தப் புதிய வேலையில் கொஞ்ச நாள் அவனுக்கு எதுவும் புரிபடத்தான் இல்லை.

அவனுக்கு இரண்டு ஆண்டுகள் முன்னதாகவே வேலைக்கு வந்தவள் அந்தப்பெண். அவனைவிட வயதில் சிறியவள்; குறைவாகப் படித்தவள். ஆனாலும் அவளுக்கு அனுபவம் இருந்தது. சின்னச் சின்ன விஷயங்களில்கூட அவனுக்குத் துணையாக இருந்தாள். போனில் பேசுவது, வரவேற்பது, சாதுரியமாகப் பதில் சொல்லி அனுப்புவது, இவைகள் எல்லாம் அவளுடைய வேலை.

ஓழிந்த வேளைகளில் அவள் அவன் மேஜைக்கு வருவாள். பேனாவை திறக வைத்துக் கொண்டு, பள்ளிக்கூடப் பெண்ணைப் போலத் தலையைச் சாய்த்துக்கொண்டு அவள் பேசுவது அவனுக்கு வேடிக்கையாக இருக்கும். அவனுக்கும் அவளிடம் பேச வேண்டும்போலத் தோன்றும். அதற்காகவே ஒரு சந்தேகம் பிறக்கும். அவளைத் தேடிக் கொண்டு போவான்.

# இடைவெளிக்கு



அவர்களுக்குள் வேற்றுமை இல்லாமல் போகவில்லை. அவளுக்குப் பிடித்தவை சில அவனுக்குப் பிடிக்காது. புத்தகங்கள், திரைப் படங்கள், சங்கீதம், சிற்றுண்டி, இப்படி ஒவ்வொன்றிலும் அவர்களுடைய ருசிகள் இணைவதும் உண்டு; பிரிவதும் உண்டு. பின்னல் விலகி விலகித்தான் ஒன்றாக இணைந்து கூடுகிறது. அதைப்போல் அந்தச் சிறு வேற்றுமைகளும் அவர்கள் மறுபடியும் ஒற்றுமை காணுவதற்குத்தான் உதவியாக அமைந்தன.

அவன் டைரியில் ஒரு நாள் இப்படி எழுதி இருந்தான்.

"காதல் என்பது என்ன? மற்றவர்கள் நினைக்காவிட்டாலும் சரி; அவர்கள் தங்களுக்குள்ளே தாங்கள் இருவரும்தான் ரொம்ப அழகானவர்கள் என்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். நீளமான சோபாவில் நிறைய இடம் இருந்தாலும், அவர்கள் உட்காருவது என்னவோ நெருங்கித்தான். உட்காருவதைப்போல் அவர்கள் மனத்திலும் இடைவெளி ரொம்பச் சின்னதுதான். நாலு பேர் சுற்றிலும் இருக்கும்போது அவர்களைவிட அமைதியானவர்களைப் பார்க்க முடியாது. ஆனால் அந்த நேரம் முழுவதும் அவர்களுடைய உள்ளங்கள் அப்புறம் என்ன பேசுவது என்பதைப் பற்றித்தான் மௌனமாகத் திட்டங்கள் போட்டுக் கொண்டிருக்

கும். அவர்களுடைய கனவுகள் அழகான ரோஜாக்கள்-முள்ளில்லா ரோஜாக்கள்!''

அந்தப் பக்கத்தில் பூவிதழ் ஒன்றை அடையாளமாகச் செருகி அவன் மேஜை டிராயரில் வைத்துவிட்டாள். அவன் அதைப் படித்தானா என்று கேட்கவில்லை. அப்புறம் அவன் பார்வையில், பேச்சில், விரல்கள் தொடாத மன உணர்வில், அவன் அதை அடையாளம் கண்டு கொள்ள முடிந்துவிட்டது.

அது அந்தக் காலத்துக் காதல். இப்போது, 'இளைக'ளுக்கு இருக்கும் தைரியம் அந்தச் 'சிறிசு'களுக்குக் கிடையாது. இப்படித்தான் அவர்கள் தங்கள் நெஞ்சங்களை ஆறு மாதங்கள் பழகியபின், அறிமுகம் செய்து கொள்ள முடிந்தது. ''என்ன சொல்லுகிறாய்?'' என்று கேட்டுவிடும் துணிச்சல் அவர்களுக்கு இல்லை.

டைரி அவனுக்குத் திரும்பி வந்தது. அவன் மேஜை டிராயரில் அது இருந்ததை அவன் பார்த்தான். ஆனால் அந்தப் பக்கத்தை மட்டும் காணோம். அவன் புரிந்து கொண்டான்; அவள் அவனைப் புரிந்து கொண்டுவிட்டாள் என்று. அவர்களுடைய பழக்கத்திலேயே இப்போது ஒரு மெருகு இருந்தது: இனம் பிரிக்க முடியாத ஓர் இனிமை இருந்தது; பார்த்துக் கொள்ள முடியாத சிறுபொழுதுகளிலும்கூட முழு

கொண்டு போனுள். அவன் நெஞ்சில் ஒரு தீர்மானம் உறுதியாக விழுந்து கொண்டிருந்தது. அவனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்ததைப் போலக் காத்திருந்தார் அவள் தகப்பனர்.

இரண்டொரு சொற்களில் பதில். உல்லாசமாக ஒரு புன்னகை. கடைசியில் ஒரு காகிதத் துண்டைக் கொண்டு வந்து கொடுத்தார் அவர். அவன் டைரியிலிருந்து கிழித்த அந்தப் பக்கம். கையில் சட்டென்று ஐஸ் கட்டியை ஏந்தியது போல் இருந்தது.

''அவள் கைப்பையில் இருந்தது இது.''

''நான்தான் எழுதினேன் இதை!''

''எதற்காக?''

அவன் பதில் சொல்லாமல் தலைகுனிந்து கொண்டான். அவர் பழங் காலத்து மனிதர். அவருக்கு அதைப் போல ஓர் அநுபவம் நேர்ந்திருக்க நியாயமில்லை.

''எனக்குப் புரிகிறது. ஆனால் ஒரு சந்தேகம். இது வெறும் கவர்ச்சி – இன்பாச்சுவேஷன் இல்லையே?''

''நிச்சயமாக இல்லை!''

''அப்படியானால் ஒரு நிபந்தனை. இன்னும் மூன்று மாதங்களுக்கு நீயும் அவளும் பார்த்துக்கொள்ளக் கூடாது. அதற்குப் பிறகும் உனக்கு இதே ஆர்வமும் உறுதியும் இருந்தால் நாம் சந்தித்துப் பேசலாம்.''

# ஒரு பாஸம்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

முழுவென்று ஒரு மன வேதனை இருந்தது. குளத்துத் தண்ணீர் சிறு சிறு அலையாகச் சிரிப்பது போல, ஒவ்வொரு நாளும் மென்மையான ஒவ்வொரு நிகழ்ச்சி....

இந்த மகிழ்ச்சி நிலைக்கவில்லை. அந்த மாதக் கடைசியில் அவள் வேலையிலிருந்து நின்றுவிட்டாள். அவளுடைய தந்தைதான் வந்து அவளுடைய ராஜிநாமாக் கடிதத்தைக் கொடுத்துவிட்டுச் சம்பளத்தை வாங்கிக் கொண்டு போனுர். அவனுக்குப் பெரிய அதிர்ச்சி.

வேலைக்கு வரவே பிடிக்கவில்லை. அவளுடைய மேஜையில் வேறு யாரோ உட்கார்த்துவிட்டார்கள். திரியைத் தூண்டி ஒளியைக் கட்டவிழ்த்துவிடும் அந்த முகம் அங்கே இல்லை. அவன் வாழ்க்கையில் ஒன்றும் இல்லை. ஒரு நாள்.... இரண்டு, மூன்று... ஒரு வாரம்.

அதற்கு மேல் அவனுக்குப் பொறுமை இல்லை. அவளுடைய வீட்டைத் தேடிக்

டீன்ஏஜ் கதை ⑦



வலுக் கட்டாயமாக இப்படி ஒரு பிரிவா? அவள் வெளியே வந்து பார்க்கவே யில்லை. ஒரு பார்வையில், புன்சிரிப்பில் அவனுக்கு அவள் தைரியம் கொடுத்திருக்கலாம். ஆனால் அந்தச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

மூன்று மாதங்கள். இற்றுத் தொய்ந்து போய், ஒவ்வொன்றாகப் பிடித்துத் தள்ளிய நாட்கள். கடற் கரையில் போய் உட்கார்ந் திருப்பான். மனத்துள் அந்த மோகம் அலை கடலாகப் பொங்கும்.

அவன் அவளோடு எங்கேயும் தனியாக வந்ததில்லை. அவர்களுக்குள்ளே அந்தரங்க மான பேச்சுக்கள் எதுவும் மெத்தென்று இறங்கியதில்லை. அவள் விரலைக்கூட அதுவரை அவன் தீண்டியதில்லை. ஆனாலும் இந்தப் பிரிவில் எப்படி ஒரு தனிமை? சுற்றிலும் உலகமே இருளடைந்து சோபை மங்கி விட்ட தைப் போன்ற உணர்ச்சி?

மூன்று மாதங்கள் முடிந்து அவள் தந்தை யைப் பார்க்கப் போனபோது, புதுப் பள்ளிக் கூடத்துக்குப் போகும் குழந்தையாக அவன் நெஞ்சில் ஒரு கலவரம். அவன் காலடி ஓசைக்குக் காது காத்துக் கொண்டிருந்தது. கண்கள் ஜன்னல்களைத் தேடின. அவர் மட்டும்தான் வந்தார், அவனை வரவேற்க. உட்கார வைத்துக் கள்ளிச் சொட்டாகக் காப்பி கொடுத்தார். புன்னகையோடு புரு வம் உயர்ந்தது.

''அவள் கல்யாணம் நிச்சயமாகி விட் டது!'' என்று மூலைகளில் மஞ்சளும் குங்கும மும் தடவிய காகிதத்தை நீட்டினார். திகைப் பில் அவன் உடலெங்கும் ஒரு சூடு. இதற் காகவா காத்திருந்தான் அவன்? நடுங்கும் விரல்கள் காகிதத்தைப் பிரித்தன. உள்ளே அவள் பெயரும் அவனுடைய பெயரும்....

அவர் எழுந்து உள்ளே போய்விட்டார். அவன் முகம் நிமிர்ந்தபோது அவள் எதிரே உட்கார்ந்து கொண்டிருந்தாள். இதழ்களில் அதே கள்ளச் சிரிப்பு.

''என்ன செய்து கொண்டிருந்தாய் இந்த மூன்று மாதங்களும்?''

''நாம் குடும்பம் நடத்தப் போவது எப்படி என்று திட்டம் போட்டுக் கொண்டிருந் தேன்!''

எவ்வளவு உறுதியான பதில்? அவனுக்கு அவள் மனநிலையைப் பற்றிய சந்தேகமே இல்லை. அவன் மனத்தில் அந்த ஜன்னல் மூடவே இல்லை. நான் தவறாமல் அதன் வழியே நம்பிக்கை யென்னும் வெய்யில் உள்ளே விழுந்து கொண்டே யிருந்திருக்கிறது.

அதுதான் அவன் சுபாவம். அப்புறம் அவன் வாழ்க்கையிலும் அப்படித்தான். அவன் சிறு தடங்கல்களிலும் மனம் கலங்கிப் போவான். அவள் துணைதான் அவனுக்குத் தைரியம். அவளுடைய தன்னம்பிக்கையே அவனுக்கு ஊன்றுகோல்.

அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை. அந்தக் குழந்தை பெண்ணாகும்வரை, அவர்களிடை எத்தனையோ கருத்து வேறுபாடுகள்; கண் டித்து வளர்க்க அவளுக்கு ஆசை; பிறந்த வீட்டில் இருக்கும்வரை பிரியமாக வளர்க்க அவனுக்கு ஆசை. அவள் கேட்பதை யெல் லாம் வாங்கிக் கொடுப்பான். எண்ணத்தில், பேச்சில், பழகும் விதத்தில் ஒரு சுதந்திரத்தை அவளுக்கு அனுமதிப்பான்.

''நீங்கள் அவளுக்கு நிறைய இடம் கொடுக்கிறீர்கள்'' என்பாள் அவள். அவன் சிரித்துக் கொண்டே பதில் சொல்வான்:

'' இதுதான் தலைமுறை இடைவெளி— 'ஜெனரேஷன் கேப்' என்கிறார்களே அது.* அவள் இப்போது இருக்கும் விதமாக நீ இருந்ததில்லை. நீ அவள் வயதில் என்ன நினைத் திருப்பாய் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை.''

''நான் சொல்லிக் கொடுப்பேனே?''

''அவள் உனக்குச் சொல்லிக் கொடுப்பாள். நெஞ்சில் கைவைத்துச் சொல்லு. அந்த நாளில் — அந்த மூன்று மாதங்களில்—'அப்பா ஏன் என்னைப் புரிந்து கொள்ளவில்லை?' என்று எண்ணிய நேரங்கள் இல்லையா?''

''இருந்தது.'' அவள் முகம் சிவந்தது. ''ஆனால் என் அப்பா எனக்கு இப்படிச் சுதந் திரம் கொடுத்தது இல்லையே.''

''இருபது ஆண்டுகளில் உலகம் எப்படியோ மாறிவிட்டது. நாமும் மாறித்தான் ஆக வேண்டும். இல்லாவிட்டால் நாம் பின் தங்கிவிடுவோம். அவர்கள் நம்மை விட்டுப் போய்விடுவார்கள்!''

அவள் வேறு விதமாக நினைக்கலாம். ஆனால் அவன் சொல்வதைச் சரியென்று எடுத்துக் கொள்வாள். அதுதான் அவர்களுடைய ஒற்றுமையின் இரகசியம்.

அந்தப்பெண் கல்லூரியில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தாள். அவளுடன் பேச, சேர்ந்து படிக்க அவளுடைய தோழிகள் வருவார்கள். சிரித்துக் கொம்மாளமடித்து அவர்கள் பேசும் விஷயங்கள் அவன் காதில் விழும். பல அவ னுக்குப் புரியாதவை. அந்த நாளில் அவன் கேள்விப்படாதவை. இந்த நாளைய, இந்த 'மன் ஏஜ்' வாலிப உலகின் சொத்துக்கள் அவை. விளையாட்டாக மதித்துச் சிரித்துக் கொள்வான்.

விளையாட்டாக நிற்கவில்லை அது. அந்தத் தோழிகளைப் போல ஒரு நாள் அந்த வாலிப

---

* அட்டைப்படத்தில், தன்னையொத்த வயதில் தன் தாய் எப்படித் தோற்றமளித்திருப்பாள் என்பதை எண்ணி உணரும் மகள், அன்றைய அவள் மன நிலையை மட்டும் புரிந்துகொள்ள முடியாதிருப்பதைச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் திரு கல்பனா. □

நாளும் பாட்டா அணிந்திடுவீர்
நளின நடை நடந்திடுவீர்

நாகரீக நங்கையரின் நவிர்த்த பாதங்களுக்கு
சிறந்த அணிகலன் பாட்டா காலணிகள்.
பஞ்சு போன்ற மென்மையுடைய இக்காலணிகள்
திண்மையும் வனப்பும் ஒருங்கிணைந்து
எக்காலத்திற்கும் இன்பமளிப்பவை.
கண்கவர் இக்காலணிகளை இன்றே அருகிலுள்ள
பாட்டா விற்பனை நிலையத்தில் வாங்குங்கள்.

பாட்டா சிதாரா

Bata
Bata
Bata
Bata



NEW! SUPER
Surf

னும் வந்தான். அவனை அவள், தந்தைக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

''சந்தர் டாக்டராகப் போகிறார் அப்பா. என்னைப் போலவே 'பாப் மியூஸிக்' என்றால் இவருக்கும் பிடிக்கும். இன்று மியூஸிக் அகாடமிக்கு என்னை அழைத்துக்கொண்டு போக உங்களிடம் 'பர்மிஷன்' கேட்க வந்திருக்கிறார்.''

அந்த வீட்டின் அமைதியான நீர்ப்பரப்பில் ஓர் அலை. நிதானம் காண அவனுக்குச் சில நிமிடங்கள் ஆயின. இப்படி ஒரு இடைவெளியா, இரண்டு தலைமுறைகளுக்கு நடுவில்?

இருந்தும் அவன் தடுக்கவில்லை. அவர்கள் கிளம்பிப் போய்விட்டார்கள்.

''அந்த நாளில் என் தந்தை உங்களைக் கேட்டது நினைவிருக்கிறதா?'' என்று கேட்டாள் அவள்.

''நானும் கேட்கப் போகிறேன். அதற்கு இன்னும் நேரம் வரவில்லை.''

''அந்த வாலிபன் உங்களைப் போலப் பொறுமையாகப் பதில் சொல்லுவான் என்று எதிர்பார்க்கிறீர்களா?''

''நிச்சயம் பதில் சொல்வான். இது 'ஜெட் ஏஜ்'. அதற்குப் பொருத்தமான பதிலாக இருக்கும் அவனுடையது.''

அந்தச் சிரிப்பில் அவள் சமாதானமடையவில்லை. ஒரு பெண்ணின் பலமும் பலவீனமும் இன்னொரு பெண்ணுக்குத்தான் தெரியும். உள்ளூற ஒரு கிலியில் அவள் அமைதியின்றித் தவித்துக் கொண்டிருந்தாள்.

அப்புறம் அவன் அடிக்கடி அங்கே வந்து போகலானான். அவர்களோடு உட்கார்ந்து பேசுவான்; சாப்பிடுவான்; குடும்ப விஷயங்களில் கூட அபிப்பிராயங்கள் சொல்லுவான்.

ஒரு நாள். அன்று அவன் வந்து உட்கார்ந்ததிலிருந்து, பழகியதிலிருந்து, பணிவாகப் பேசியதிலிருந்து, என்ன கேட்கப் போகிறான் என்பதை அவன் ஊகித்துக் கொண்டுவிட்டான். கடைசியில் அந்தக் கேள்வி வந்தது வாலிபனிடமிருந்து; அவனுடைய பதிலும் தயாராக இருந்தது.

அந்த நாளில் நடந்தது போல் இப்போதும் ஒரு சோதனை. மூன்று மாதங்களின் முடிவில் அவனுக்குக் கிடைத்தது போல அந்த வாலிபனுக்கும் ஒரு திருமணப் பத்திரிகை கிடைக்கும்....

வாலிபன் சிரித்துக் கொண்டே தன் பையிலிருந்து ஒரு கவரை எடுத்துக் கொடுத்தான். அவன் அதைப் பிரிக்கும்போது உள்ளிருந்து சர்க்கரைப் பொடி சிந்திற்று. முத்து முத்தான எழுத்துக்களால் எழுதப்பட்ட ஒரு திருமண அழைப்பிதழ் அது. அதில் அவன் பெயரை அவளும், அவள் பெயரை அவனும் எழுதியிருந்தார்கள். பின்னாலிருந்து 'களுக்' கென்ற சிரிப்புக் கேட்டது. அவனுடைய பெண்தான்.

''நாங்கள் தேதியை மட்டும் போடவில்லை ஸார்! நீங்கள் எந்தத் தேதியைப் போட்டாலும் நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம்; பொறுத்திருப்போம்!''

சட்டென்று விழியோரங்கள் உறுத்தி நிறைந்தன. தந்தை இரண்டு கைகளையும் நீட்டிக் கைக்கு ஒருவராக அணைத்துக்கொண்டார்; மகளையும் மருமகனாக வரப்போகும் வாலிபனையும்.



''நமது அரசாங்கத்தைப் போலவே நானும் மதச் சார்பின்மையைக் கடைப்பிடிக்கிறவன் நான். ஜாதிமத வேறுபாடின்றி எல்லாரிடமிருந்தும் லஞ்சம் வாங்குவேன்!''

---

அந்த வீட்டில் அன்று பால் பாயசத்தோடு விருந்து. பாயசத்தை அவன் மனைவி காலையிலேயே தயார் செய்து விட்டாள். அம்மாவுக்கும் பெண்ணுக்கும் முன்கூட்டியே ஒப்பந்தமா?

இப்போது உனக்கு இந்தக் கடிதம் புரிந்திருக்கும்; கதையும் புரிந்திருக்கும். ஆமாம். இது உன் அம்மாவின் கதை; நம் குடும்பக் கதை; நீ தொடங்கப் போகும் வாழ்க்கைக்கு ஒரு முன்னுரை.

அவள் முதலில் எனக்கு மனைவி; அப்புறம் தான் உனக்குத் தாய். வாழ்க்கையில் வந்த நிலைகள் மட்டும் அல்ல; என்னுடைய மனத்திலும் கூடத்தான். இனிமையான வாழ்க்கைக்கு இதம் சேர்க்கும் துணையாகத்தான் அவளை நான் இதுவரை உணர்ந்திருக்கிறேன். இன்று அது ஆண் பெண் உறவைக் கடந்து ஒரு தோழமை.

''இது உங்கள் கதை; எங்கள் வாழ்க்கை வேறு விதமாக இருக்கும்'' என்று நீ சொல்லலாம். உண்மைதான். எங்கள் காலம் வேறு. உங்களுடைய இன்றையப் பருவம் வேறு. எங்கள் நாளில் நாங்கள் பார்த்த 'மன் ஏஜ்' உலகம் வேறு. இரண்டுக்கும் நடுவே ஓர் இடைவெளி இருக்கலாம்.

ஆனால் அதற்கு ஒரு பாலம் அமைத்துக் கொள்ளும் மனப் பாங்கு உங்கள் இருவருக்கும் இருக்க வேண்டும். அதற்காகத்தான் இந்தக் கடிதம். இனிமையான வாழ்க்கைக்கு அடிப்படையான பண்புகள் ஒன்றுதாம். தலைமுறை இடைவெளியை மூடவேண்டாம்; பாலம் அமைப்போம். இந்தக் கரையில் அழகான நந்தவனம் இன்னும் பூத்துச் சொரிந்து கொண்டிருக்கிறது. அதை நீங்கள் வந்து பாருங்கள்.

இன்று எங்களுக்கு மணமாகி இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆகிறது. இன்னும் எங்கள் வாழ்க்கையில் வசந்தம் மாறவில்லை. எங்கேயோ அதன் மணத்தை நாங்கள் இன்னும் உணர்ந்து கொண்டுதான் இருக்கிறோம். நம்முடைய வாழ்க்கையின் கனவு தொடர்ச்சியாக இருக்கட்டும்.

உன்னை மணக்கப் போகும் சந்தருக்கு, இதைக் காட்டிலும் மதிப்பு உயர்ந்த பரிசு எதையும் நான் தர முடியாது. அவனை மணக்கப்போகும் பெண், அவள் தாய் தன் கணவனை அழைத்துச் சென்றதைப் போல, அவனுக்குத் துணையாக இருந்து அழைத்துச் செல்லட்டும். புனிதமான ஒற்றுமையில் இருவருடைய வாழ்க்கையும் இணையட்டும். அதுவே எங்கள் ஆசை, பிரார்த்தனை எல்லாம்.

அன்பு நிறை ஆசிகளுடன்
உன் அப்பா.''





Prestige
PRESSURE




Prestige
PREETT

# மடைப்பள்ளி மாப்பிள்ளை

ஆர்வி



பெருமாள் கோயில் மடைப்பள்ளியிலிருந்த திருமலை தனக்குள் முணுமுணுத்துக்கொண்டான். 'ம' என்ற எழுத்தைக் கவிழ்த்து வைத்தது போல, மடைப்பள்ளி கோயிலின் வெளிப் பிராகாரத்தை யொட்டி ஆற்றங் கரைப் படிக்கட்டுக்கு அருகில் இருந்தது. அவன் முணுமுணுப்பது சில சமயம் யாருடனோ கோபமாகப் பேசுவது போல, ஏன் கொஞ்சுவதுபோலவும்கூட வெளியிலிருப்பவர்களுக்குக் கேட்பதுண்டு. இந்தக் கோளாறெல்லாம் இப்போது கொஞ்ச காலமாகத்தான்; அதாவது சுமார் ஒரு வருஷமாக. அதற்கு முன்பெல்லாம் அவன் முணுமுணுப்பதில்லை. அதற்குப் பதில் வாயில் உளுத்தம் பருப்போ, கொத்துக் கடலையோ, பாசிப் பயிறோ, முந்திரிப் பருப்போ — எதையோ ஒன்றைச் சதா மென்றபடியே இருப்பான். வாய் அரைவை யந்திரம்தான். கொஞ்சம் பெரிய அரவை எந்திரம். அசைபோடும் வாயும் சரி, அள்ளிப் போடும் கையும் சரி, அவனுக்குப் பெரியவை.

அவனும் இந்த இருபத்தைந்து வயதுக்குச் செம்போத்துப் போலத்தான் இருப்பான். வாட்ட சாட்டமான கை. கால், உடம்பு, அதற்குத் தகுந்தபடி மூக்கும் விழிகளும் கொண்ட பரந்த முகம். வஞ்சனையில்லாமல் அப்படி ஒரு வளர்ச்சி. ஆள் சிவப்பில் சேர்த்திதான். ஆனால் அரையிலும் தோளிலும் பிசுக்குப் பிடித்த அழுக்கு வேஷ்டி, துண்டு. குளிப்பானோ மாட்டானோ — குளித்தாலும் சரியாகக் குளிக்கும் பொறுமை கிடையாது— நெற்றியில் பளிச்சென்று திருமண் இட்டுக்கொண்டு அட்டகாசமாகத்தான் நடந்து வருவான். இரண்டு கைகளையும் வீசுகிற வீச்சில் எது நடுவில் தட்டுப்பட்டாலும் எடுப்பது தெரியாமல் கை லாவி எடுத்துவிடும். அவன் தெரு திரும்புகிற திருப்பத்தில்தான் ராகச் செட்டியார் மளிகைக் கடை. பருப்பு மூட்டைகளை நோம்பிப் புடைத்து, பார்வையாக, சரக்குகளைப் பிரித்து வைத்திருப்பார். கைகளை வீசியபடி திருமலை தெருவோடு போவது போலத்தான் இருக்கும். கழுகு வந்து கொத்திக் கொண்டு போகிற ஜதி. கடையைத் தாண்டிப் போய்க் கையைத் திறந்தால் குறைந்தபட்சம் ஓர் ஆழாக்குப் பருப்பாவது கையோடு வந்திருக்கும். ராகச் செட்டியாரிடம் அவனுக்கு அபார நம்பிக்கை. கல்லு, கட்டி இல்லாமல் எல்லாம் சுத்தமாகத்தான் இருக்கும் என்று அப்படியே வாய்க்கு அனுப்பி விடுவான். வீடு போகிற வரையில் மெல்லுவதற்கு அவனுக்கு அது போதும். ஒரு நாள் செட்டியார் கடை தம்பையா வேடிக்கை பார்க்கலாமே என்று குறும்புக்காக, பருத்திக் கொட்டை மூட்டையைப் பிரித்து வைத்து விட்டான். திருமலை இன்றைக்கு இதைத்தான் அசை போடட்டுமே என்று அவனுக்கு எண்ணம். பாவம், கடையில் தம்பையா தான் ஏமாந்தான். திருமலையின் கை லாவி எடுத்தது பருத்திக் கொட்டையை அல்ல; அதற்கு எதிரே இருந்த துவரம் பருப்பைத் தான். கையிலேயே கண் இருக்குமோ என்று நினைக்கும்படி அப்படி ஒரு சுருக்கு. மெது என்ற பேச்சுக்கே திருமலையிடம் இடமில்லை.

தெருப் பிள்ளைகள் சடுகுடு விளையாடிக் கொண்டிருப்பார்கள். திருமலை நடுவில் புகுந்து இரு கைகளையும் கபந்தாசுரன் மாதிரி பிரித்துக் கொண்டு "கடகட குடுகுடு வாடா ஓடி — பழைய கேடீ....சு....சு...." என்று ஒரு வட்டம் அடித்து, அத்தனை பேரையும் விரட்டி மிரட்டி விட்டுப் போய்விடுவான். அந்தச் சிறுவர்கள் அவனுக்கு வைத்த செல்லப் பெயர்கள்: செக்குலக்கை; மந்திக் குரங்கு; தடி தீவட்டி!

அதெல்லாம் இப்போது போய்விட்டது. வாய் அசை போடுவதையே மறந்துவிட்டது. அதற்குப் பதில் அவனை அறியாமலேயே வாய் முணுமுணுப்புத்தான் வந்திருந்தது. ஆரம்பத்தில் எல்லாம் உதட்டுக்குள்ளேயே ஓசைப் படாமல் அடங்கி யிருந்த முணு முணுப்பு வர வர மற்றவர்கள் காதுக்கு எட்டும் அளவுக்குக் கேட்கத் தொடங்கி விட்டது.

இன்றும் அப்படித்தான் கேட்டது. கவிழ்ந்த 'ம'னாவின் இருண்ட வாயினுள் அடியெடுத்து வைத்த சம்பகத்தின் கால்கள் அப்படியே தயங்கி நின்றுவிட்டன. உள்ளே வேறு யாரோ இருக்கிறார்கள் போலிருக்கிறதே என்று ஓர் அச்சம் அவளைப் பிடித்து நிறுத்திற்று. ஒரு வேளை திருமலையின் அப்பா ரங்கண்ணாவே வந்திருப்பாரோ என்ற பயம் தான் முதலில் வந்தது. அவர்தான் தள்ளாமை வந்து படுத்த படுக்கையாகிவிட்டாரே என்ற நினைப்பு அப்புறம்தான் வந்தது. அப்படியானால் வேறு யார் இந்த நேரத்தில் உள்ளே வந்திருப்பார்கள்? யார் வந்தாலும் இந்த இருட்டுச் சந்தைத் தாண்டி மடப் பள்ளிக்குள்ளே போகமாட்டார்களே—ஆனால் பேச்சுக் குரல் கேட்கிறதே—

"இதான் தெரியுமா ஒனக்கு. இன்னமும் தெரியுமா? ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் யாருக்காக இந்த வெண்பொங்கல் பண்ணி வைக்கிறேன்? நீ வருவே வருவேன்னு எத்தனை மணி வரையிலே பொறுத்துப் பொறுத்துப் பார்க்கிறது? நீ இந்தத் தெரு வழியா வராமெ போகாமெயா இருக்கே? அப்படியே கோயில் பக்கமா நுழைஞ்சு, பெருமாளைப் பார்க்கறதோட இந்த மடப் பள்ளியையும் எட்டிப் பார்த்து விட்டுப் போகப்படாது?.....

"போகமாட்டே நீ. எனக்குத் தெரியும். ஒனக்குப் பயம். கடிச்சா தின்னுப்புடுவேன்? என்னவோ நடுங்கிச் சாகறியே. இந்த நேரத்துக்கு வந்தால் எந்தப் பரதேசியும் இங்கே வரமாட்டான். நீபாட்டுக்கு ஜோரா வரலாம்; வெண்பொங்கலை வாங்கிண்டு போகலாம். இங்கியே கொஞ்சம் தின்னுட்டும் போகலாம். நெய் சொட்டும். எல்லாருக்கும் நெய் விட்டுடுவேனா? எப்படிக் கட்டும் முப்பது காசுக்கு? உனக்குன்னு காசுக் கணக்கு ஏது? ஸ்பெஷலான்னு கவனிப்பேன்!"

திருமலையின் குரல்தான் இது; சந்தேகமே யில்லை. இவ்வளவு கேட்டபிறகு இங்கே எதற்காக இன்னும் நிற்பது?

ஆனால் சம்பகம் அந்த இடத்தைவிட்டு அசையாமல் நின்று கொண்டேயிருந்தாள். அவளுக்கு அவசியம் இங்கிருந்து கிடைப்பது எதையாவது வாங்கிக் கொண்டு போய்த் தான் ஆக வேண்டும். இல்லாவிட்டால் அம்மா பட்டினிதான். வேறு எதை வாங்கிக் கொண்டு போனாலும் சாப்பிட மாட்டாள். மாதம் மூன்று நாள் ஒரு வேளைப் போது இந்தப் புளியோதரை; தயிர் சாதம். இருந்தால் வெண்பொங்கல். எல்லாம் முப்பது பைசாதான்.

அவள் கையைத் திறந்து பார்த்தாள். இரண்டு பொட்டலத்துக்கு வேண்டிய காசு இருந்தது. இன்னும் முப்பது காசு இருந்தால் மூன்று சாதங்களையும் வாங்கலாம். அது தான் வீட்டிலேயே வேறு காசு இல்லையே. ஆகவே அந்த ஆசைக்கே இடமில்லை. ஆனால் திடீரென்று இந்த இரண்டு பொட்டலத்தைக்கூட வாங்கிக் கொண்டு போக அவளுக்குப் பிடிக்கவில்லை. வந்ததே தெரியாமல் திரும்பிவிடலாமா என்றுதான் பார்த்தாள். ஆனால் கால் ஏன் அடியெடுத்து வைக்க மறுக்கிறது? உள்ளே வந்திருப்பவள் வெளியில் வராமலா போய் விடுவாள்? அவள் யாரென்று அந்த முகத்தைக் கொஞ்சம் பார்த்து விட்டுத்தான் போகலாமே!



சம்பகத்துக்கு இன்னோர் எண்ணம்கூட வந்தது. உள் பக்கம் வந்திருப்பது யாரென்று எட்டிப் பார்த்தால்தான் என்ன மோசம்? மடப்பள்ளிக்குள்ளே தனியாக ஓர் ஆண் பிள்ளை இருக்கிற இடத்துக்கு வந்திருக்கிறாளே ஒருத்தி! என்ன துணிச்சல்!

சம்பகத்துக்கு என்னமோ ரோசமாகவும் இருந்தது. யாரோ ஒருத்தியிடம் திருமலை இவ்வளவு தூரம் அக்கறை காட்டிப் பேசுவது அவளுக்குச் சகிக்கவில்லை. உள்ளே இப்போது பேச்சுக் குரல் கேட்கவில்லை. பாத்திரங்களின் ஓசையோடு வெண்பொங்கலின் மணம் வந்து மூக்கைத் துளைத்தது. இருந்தாலும் அங்கே நிற்கப் பிடிக்கவில்லை. வந்த சுவடு தெரியாமல் போய் விடலாம் என்று வாசலை விட்டுத் தாண்டி வாதா மரம் வரையில் வந்தாள். உடனேயே வாதாம் இலையில் கட்டிய பொங்கலுக்காக அம்மா காத்திருப்பாளே என்ற நினைவு வரவே மறுபடியும் மடப் பள்ளிக்குச் சந்துக்குள்ளே நுழைந்தாள். இப்போது கடைசி வரையில் போய்விட்

டாள். கழுத்தை மட்டும் வளைத்து உள்ளே பார்த்தபோது அங்கே எந்தப் பெண்ணை யும் காணவில்லை. திருமலைதான் பானையி லிருந்து சாதத்தை வடித்துக் கொண்டிருந் தான். மடப்பள்ளியிலிருந்து வெளியில் போக வேறு வழியில்லை. அப்படியானால்



உள்ளே பேசிக் கொண்டிருந்தவள் எப் போது வெளியே போனாள்? ஒன்றும் புரிய வில்லை. அவள் வெளியில் போனபோது அங் கிருந்தவனும் பின்னாலேயே போயிருப் பானோ ? தெரியவில்லை.

ஊரிலே எத்தனை எத்தனையோ விதமான கிராப்புத் தலைகள் இருந்தாலும் திருமலை குடுமிதான் வைத்திருந்தான். தொழிலுக்கு ஏற்ற வேஷம் என்றாலும் அதுவே அவனுக்கு எடுப்பாகத்தான் இருந்தது. திருமலையின் முதுகுப்புறம்தான் இப்போது கண்ணில் பட்டது. எத்தனை விசாலமான முதுகு! நன்றாக இழைத்த பலாப் பலகை மாதிரி! வந்தது தெரியாமல் மொட்டுப் போல் நின்று எட்டிப் பார்த்துக் கொண்டிருப்பது கூடாதுதான். ஆனால் அவளை எப்படிக் கூப் பிடுவது? முதுகெல்லாம் முத்து முத்தாக வேர்த்துவிட்டிருக்க, அவன் மடப்பள்ளியில் புளியோதரை கலப்பதை வேடிக்கை பார்த்த படி நின்றாள். அவனுடைய கைச் சுருக்கு அவளுக்குப் பிரமிப்பாக இருந்தது. ஒரு நிமிஷத்தில் ஒரு கூடைப் புளியோதரை தயாராகி விட்டது!

பரபரவென்று கை அடுத்த காரியத் தைச் செய்ய, வாய் ஒரு பாட்டைத் தாறு மாறாகப் பாடத் தொடங்கிவிட்டது. பாட்டை அவன் ஒரு பக்கம் இழுக்க, குரல் வேறு பக்கம் போக, சம்பகத்துக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. எப்படியோ அடக்கிக் கொண்டாள். இருந்தாலும் திரும்பி அவளைப் பார்த்து விட்டான். உட னேயே பாட்டும் வெட்டினாற்போல் நின்று விட்டது.

அசட்டுச் சிரிப்போடு, " எப்ப வந்தாப் பலே?" என்றான்.

" இப்பத்தான்."

"நெனச்சண்டேயிருந்தேன்."

" என்னன்னு ?"

" போன வெள்ளிக்கிழமை, அதுக்கு முந்தின வெள்ளிக் கிழமையைப் போல் ஆயிடப் போறதேன்னு. ஸ்பெஷலாப் பொங்கல் பண்ணி வைச்சிருந்தேன். இன்னிக் கும் அதே போல் ஸ்பெஷல்தான். நல்ல வேளை — இன்னிக்கு அப்படி ஆகாது."

இதைக் கேட்டதும் சம்பகத்தின் முகம் சிவந்தது.

"இதென்ன, வரவாளுக்கெல்லாம்சொல்ற பாடம் போல இருக்கே."

"அப்படி எல்லோருக்கும் சொல்றது இல்லே இது."

" சித்தே முந்திகூட யாரண்டையோ வெள்ளிக்கிழமை ஸ்பெஷலைப் பத்திப் பேசிக் கிண்டிருந்தாப்பலே என் காதுலே விழுந்துதே.

"நானா? பேசிண்டிருந்தாப்பலேயா? இருக் காதே."

கையும் களவுமாகப் பிடிபட்டவன் உளறு வதுபோல் இருந்தது. அவளுக்கு அவன்பேச்சு.

" அது என்னமோ, எனக்கு ரெண்டு பொங்கல் வேணும். இதோ இருக்கு காசு."

அவள் தரையில் வைத்த நாணயத்தை அவன் குனிந்து எடுத்தவிதமே அலாதியாக இருந்தது. சோழி ஆடுவதுபோல் அதை எடுத்து அவளிடமே திருப்பி நீட்டினான்.

" இருக்கட்டும்; அப்புறமா வாங்கிக்க றேன். மொதல்லே கடச் கட இங்கேயே சாப் பிடக் கொஞ்சம் பொங்கல் கொடுக்கறேன்."

"ஊகூகும். எனக்கு வாண்டாம்."

"அப்படிச் சொன்னா யார் விட்டா? ஸ்பெஷலாச் செய்ததைச் சாப்பிடாட்டா விட்டுடுவேனா? சாப்பிட்டுத்தான் ஆகணும். சாப்பிட்டுப் பார்த்துட்டு எப்படியிருக் குன்னு சொல்லணும்."

" நான் அகத்துக்குப் போய்ச் சாப் பிட்டுக்கறேன்."

"இங்க யாரும் இப்ப வரமாட்டாங்க. எனக்கும் கொஞ்சம் காரியம் இருக்கு. அதுக் குள்ளே சாப்பிட்டுடலாம்."

" ரெண்டு பொங்கலுக்கு மேலே நான் காசு கொண்டு வரல்லே."

''அதுக்கு மேலே நானும் காசு கேக்கல்லே.''

சம்பகத்துக்குப் பயமாக இருந்தது; கூச்சமாகவும் இருந்தது. என்ன ஆனாலும் திருமலையிடமிருந்து தப்பிச் செல்ல முடியாது போலிருந்தது. மடப் பள்ளிக் குறுக்குச் சுவர் மறைவில் உட்கார்ந்து திருமலை கொண்டு வைத்த பொங்கலை வாயில் போட்டுக் கொண்டபோதெல்லாம் மகா லஜ்ஜையாக இருந்தது. திருமலை மறைந்து நின்று கொண்டு எட்டிப் பார்க்கிறானோ என்றுகூட கவலைதான். ஆனால் அவன் உள்ளே தயிர் சாதம் பிசைவதில் தீவிரமாக ஈடுபட்டிருந்தான்.

திடீரென்று மடப்பள்ளிக்குள்ளிருந்து முன்பு போல் பேச்சுக் குரல் கேட்டது:

'' நானா மாட்டேங்கிறேன் ? அவ அம்மா குடுக்கணுமே. எனக்கும் கொடுத்து வச்சிருக்கணுமே. என்ன ஏழையானாலும் மடப்பள்ளி வேலைன்னா இளப்பம்தானே ? நானேக்கே சம்மதம்னு சொல்லட்டும்; அவள் அம்மாவுக்குப் பைசா செலவில்லாமே நானே செலவழிச்சுப் பண்ணிக்கிறேன் ! பின்னே எதுக்காகத்தான் இந்த ஒரு வருஷமா அஞ்சு காசு, பத்துக் காசு அப்பாவுக்குத் தெரியாமே அதிகமா வச்சு விக்கறேன்?

''இந்தக் காலத்திலே எல்லாம் தலை கிழா நொடிக்கிறதுகளே. இந்த லட்சணம் யாருக்கு வரும்? இத்தனை கிட்டக்க இன்னிக்குத்தானே பார்க்கிறேன். சிலது தூரத்துப் பார்வைக்கு நன்னாயிருக்கும். கிட்டப் பார்த்தா பொக்கையும் பொறையுமா சகிக்காது. இது என்னடான்னா செட்டியார் கடை கடலைப் பருப்பாட்டமா ரங்கா, பசுமையான்னா இருக்கு. அதுக்கென்ன, எங்கம்மா நகையையெல்லாம் போட்டா இன்னும் பிரமாதமாத்தான் இருக்கும். நான்கூடத்தான் வேறே வேலையும் கிராப்புமா இருந்தால், இன்னும் எப்படியெல்லாமோதான் இருப்பேன். அதுக்கென்ன பண்ணறது?''

சம்பாவுக்குப் பொங்கலே செல்லவில்லை. வெளியில் போட்டுவிட்டு அப்படியே போய் விடலாமா என்றுகூடப் பார்த்தாள். திருமலைக்கு இப்படி ஓர் எண்ணம் இருக்கலாம் என்று அவள் முன் தடவையே சந்தேகப்பட்டதுதான். ஆனால் மறைவிலே யாரையோ உட்கார வைத்துக் கொண்டு இதையெல்லாம் போய்ச் சொல்கிறானே என்று எரிச்சலும் கோபமும் பட்டாள். கடைசியில் கையைக் கழுவிக் கொண்டு திரும்பி வந்தபோது அங்கே மூன்று பொட்டலங்கள் இருந்தன. திருமலையும் இருந்தான்.

'' நான் ரெண்டுதானே கேட்டேன்.''

''ரெண்டு கேட்டால், மூணாக் கொடுக்கப்படாதா ?''

''அதுக்குப் பைசா கொண்டு வரல்லியே.''

'' எதுக்கும் நான் பைசா கேட்டால் தானே !''

''அதெல்லாம் வாண்டாம். அம்மா கோவிச்சப்பா.''

'' இது ஒண்ணும் இலவசம் இல்லையே. இந்த மூணுமே அறுபது காசுதான். ஒரு பொட்டலம் இருபது காசு. சரிதானா ?''

''கணக்கு என்னமோ சரிதான். பேசறது தான் சரியாப் படலே.''

காசை வைத்து விட்டு அந்தப் பொட்டலங்களை எடுத்துக் கொண்டு அவள் வேகமாக வெளியேறிப் போனாள். போகும் போது அவளுக்கு என்னமோ அழுகை அழுகையாக வந்தது. ஆனால் காரணம்தான் தெரியவில்லை.

''ஏண்டி, கண்ணெல்லாம் சிவந்து கிடக்கிறது? ஆமாம், உனக்கு இதோ இருக்கிற கோவிலுக்குப் போயிட்டு வர்றதுக்கு ஏன் இத்தனை நாழி ?'' என்றாள் அவளுடைய அம்மா.

''இனிமேல் என்னை அங்கெல்லாம் போகச் சொல்லாதே.''

'' சரியாச் சொல்லித் தொலையேண்டி. அதனாலே இப்ப என்ன மோசம் வந்தது ? ஏன் இப்படிக் கலங்க அடிக்கிறே என்னை ?''

'' ஒரு கலக்கமும் இல்லே. நீ சம்மதம்னு சொன்னாப் போறுமாம். நாளைக்கே உனக்கு மாப்பிள்ளை வாட்டசாட்டமா வந்துடுவார். பணம் காசு இல்லையென்னு விழிக்க வேண்டாமாம். வேண்டியது சேர்த்து வச்சிருக்காராம்......''

'' யார் அப்படிச் சொல்றது ?''

''யாரோ யார்கிட்டேயோ என் காது படச் சொன்னதைக் கேட்டுத்தான் வந்து சொல்றேன்.''

'' அதான் எங்கேன்னு கேக்கறேன்.''

''மடப்பள்ளிக்குள்ளே!''

''யாரு திருமலையா — தேவு அண்ணா பிள்ளையா சொல்றான்?''

''அவர் அப்பா உனக்கு அண்ணாவா?''

''சொந்த அண்ணா ஒண்ணுமில்லே. எல்லாருக்குமே அண்ணாதான் அவர். அது மாதிரிதான் எனக்கும் அண்ணா.''

''அந்த அண்ணாவோடே பிள்ளை சொன்னதைக் கேட்டுட்டுத்தான் சொல்றேன்.''

''யாருகிட்டே சொன்னான்?''

''அதான் யாருகிட்டேன்னு தெரியல்லே. மடப்பள்ளிக்குள்ளே எட்டிக்கூடப் பார்த்தேன். வேறே யாரும் இருந்த தாகத் தெரியலே. ஆனா அவர் பேச்சுக் குரல்தான் அது.''

'' ஒருத்தரும் இருக்க வேண்டாம்; அவனாகவே பேசிண்டிருப்பான்.''

'' ஏன் அப்படிச் சொல்லறே ?''

''அடி பைத்தியமே, அவா குடும்பத்துக்கே இந்த வழக்கம் உண்டுடி. தனக்குத் தானே பேசிக்குவா. நாமெல்லாம் மனசுக்குள்ளே பேசிக்கிறது வெளியிலே கேக்காது. அவா பேசிக்கிறது கேக்கும். அவ்வளவுதான்.''

'' அப்ப உனக்குச் சம்மதம்தானும்மா?''

'' நீதான் சொல்றயே வாட்டசாட்டமா இருக்கான்னு. அப்ப உனக்குப் பிடிச்சுத்தானே இருக்கு. அதனாலே எனக்குச் சம்மதம் இல்லாமே என்ன? எல்லாச் செலவையும் அவனே பார்த்துக்கட்டும். அந்தப் பழக்கம் தான் இனிமேல் வரணும். இல்லாட்டா ரொம்பப் பொண்ணுகளுக்குக் கல்யாணமே ஆகாது இலேலே.''

'' சரி; பொங்கல் எப்படி இருக்கு ?''

''எல்லாம் நன்னாத்தான் இருக்கு!''

- வியக்கவைக்கும் உங்கள் அழகை வெளிப்படுத்திக் காட்டும் பலவித அற்புதமான சேலை ரகங்கள் வாரமொருமுறை வந்து குவிகின்றன.
- பிரமிக்கவைக்கும் உங்கள் ஆண்மையை சுட்டிக்காட்டும் பல ரக சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகளை தேர்ந்தெடுத்து திரட்டி வைத்திருக்கிறோம்.

# ராமு & கோ

உயர்ந்த ரக ஜவுளிகளுக்கு மூன்று கடைகள்

| | | |
|---|---|---|
| ① ஆர். எஸ். புரம் போன்: 24397 | ② கிராஸ்கட் ரோடு போன்: 25889 | ③ அவனுசி ரோடு போன்: 25124 |

பாம்பே டையிங் ஜவுளி ஷோரூம்



# போயிங்

ஆர். எஸ். புரம்
போன்: 35441

# ஹரே ராமா

நாகரீக ஜவுளி ஷோரூம்
சாயிபாபா காலனி முன்புறம்
போன்: 35205
கோயமுத்தூர்

எங்களிடம் ஜவுளி வாங்கும்போது விலைவாசி ஏற்றம் கண்டிப்பாக உங்களைப் பாதிக்காது

OSR

## குடும்பத்தின் நண்பர்கள் இவர்கள்தான்!

குடும்பத்திற்கு ஏற்ற நோவா அழகு சாதனங்கள். எப்பருவத்திலும் நோவா அழகு சாதனங்கள் உங்கள் அழகைப் பாதுகாத்து வருடம் முழுவதும் புத்துணர்ச்சியுடனும், வசீகரமாகவும் இருக்க உதவுகிறது. உங்கள் குடும்ப நண்பர்களான பிரில்லியண்டைன், எக்லா ஸ்நோ, நோவா டால்கம் மற்றும் நோவா பல்பொடி எப்பொழுதும் உபயோகியுங்கள்.




தயாரிப்பாளர்கள் :

**தி நோவா கம்பெனி**
L. B. S. மார்க்,
பாண்டுப்
பம்பாய் - 400078



# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை






வியர்வை துர்நாற்றத்திலிருந்தும், அதனால் நுண்ணிய கிருமிகளிடமிருந்தும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஏற்படும் சங்கடத்திலிருந்தும் பாதுகாப் பளிக்கிறது.
ஜி-11 கலந்து **சிந்தால் டாய்லெட் பவுடர்** இந்தப் பாதுகாப்பைத் தருகிறது. அதோடு...அன்றலர்ந்த மலரின் நறுமணத்தையும் தருகிறது..

**சிந்தால்** துர்நாற்றத்தை அறவே போக்கிப் பாதுகாப்பளிக்கும் டாய்லெட் பவுடர்.

Interpub/GSP-8/72R Tam

# வாக்குறுதி

ஜெய்சங்கர் நடிக்கும் படத்தில் ரசிகர்கள் என்னவெல்லாம் எதிர்பார்ப்பார்கள் என்று சிந்தித்து, சக்திவேல் முருகன் பிலிம்ஸார் இந்தப் படத்தைத் தயாரித்திருக்கிறார்கள். கட்டிப் புரண்டு உருளும் காதல் காட்சிகள், காரைக் கார் துரத்தும் காட்சிகள், ஜேம்ஸ்பாண்ட் துப்பறியும் வேலைகள், கும்கும் குத்துச் சண்டைகள், திரைக் கதையின் எதிர்பாராத திடீர்த் திருப்பங்கள், திகைப்பூட்டும் சஸ்பென்ஸ்கள், தாய் அன்பு எல்லாம் ''வாக்குறுதி''யில் மொத்தமாகவும் சில்லறையாகவும் வருகின்றன. திரைக் கதை என்று ஒன்றை வைத்துக் கொண்டு அதற்காகப் படாத பாடுகள் எல்லாம் பட்டு அவதிப் படாமல் ஏதேதோ காட்சிகளைச் சேர்த்துப் படமாக்கி விட்டார்கள்!

ஜெய் சங்கர் வந்ததும் படத்தில் களை கட்டி விடுகிறது; விறுவிறுப்பான காட்சிகளில் சுறுசுறுப்பாக நடித்திருக்கிறார். கொட்டும் மழையில் நனைந்தும், கட்டிலுக்கு அடியில் ஒளிந்தும், கட்டிப் பிடித்து உருண்டும், ஆடிப் பாடிக் குதித்தும், ஓடிப் பிடித்து மகிழ்ந்தும்— ஜெய்சங்கர் — நிர்மலா இருவரும் போதும் போதும் என்னும் அளவுக்குக் காதல் காட்சிகளில் நடித்திருக்கின்றனர்.

ஜீன்ஸ், மினி ஸ்கர்ட், நீச்சல் உடை, நைட் கவுன் முதலிய பல உடைகளில் (புடவையைத் தவிர) தோன்றிப் பலவிதமான போஸ்கள் கொடுக்கும் நிர்மலாவுக்குக் காதலனுடன் கொஞ்சிப் பேசவும், மிஞ்சிப் பேசவும் சந்தர்ப்பங்கள் கிடைத்திருப்பதோடு கொஞ்சம் கண்ணீர் விடவும் கூடச் சந்தர்ப்பங்கள் கிடைத்திருக்கின்றன. நடிப்பில் நிர்மலாவுக்கு ஒரு சபாஷ் போடலாம்!

மேஜர் சுந்தரராஜனும், வி. எஸ். ராகவனும் நெருங்கிய நண்பர்கள் — கள்ளக் கடத்தல் செய்கிற அளவுக்கு. இருவருமே உணர்ச்சியைக் கொட்டி நன்றாய் நடித்திருக்கிறார்கள். இவர்கள் உணர்ச்சிக்கு முத்தாய்ப்பு வைக்கிற மாதிரி அஞ்சலி தேவி அருமையாக நடித்திருக்கிறார்.

காமெடியில் 'சோ' வெளுத்து வாங்குகிறார். 'கணக்குக் காட்டு' என்று பெற்ற தந்தையையே கேட்டு மிரட்டும் கட்டத்தில் அவரது அரசியல் கலந்த வசனம் கொட்டகையை அதிர வைக்கிறது. இரு பொருள் பொதிந்த வசனம் அவருக்குப் பெரிதும் கை கொடுக்கிறது. அவருக்கு ஜோடியாக வரும் மனோரமாவும் நன்றாய் நடித்திருக்கிறார். தேங்காய் சீனிவாசன் அவர்களுக்குத் துணையாயிருக்கிறார்.

படத்தின் டெம்போவைக் குறைக்கவும், ரசிகர்கள் சோர்ந்து போய்க் கொட்டாவி விடவும் வசதியாக நீண்ட நான்கு பாடல்கள் காதைத் துளைத்து விடுகின்றன. அது சரி, இப்பொழுதெல்லாம் தமிழ்ப் படங்களின் பாடல்கள் ஏன் நம்மைப் பாடாய்ப் படுத்துகின்றன! இதிலிருந்து விடுபட விமோசனமே இல்லையா?

கதையை எழுதிய மோகன் காந்தி ராமனே படத்தை டைரக்ட் செய்திருக்கிறார். டைரக்ஷனைப் பாராட்ட வேண்டியதுதான். இளம் கலைஞர்களுக்கு வரவேற்புக் கூறும் வகையில் அவரை வரவேற்கிறோம்.

இந்தப் படத்தின் அதிசயம்: கொட்டும் மழையில் நீண்ட நேரம் (அதாவது ஒரு 'டூயட்' பாட்டு முடிகிறவரையில்!) நனைந்தும் நிர்மலாவின் உடைகள் கொஞ்சம்கூட நனையவில்லை!

நாகர் கோவில் கே. எஸ். மணியின் ஒளிப் பதிவு பல இடங்களில் பாராட்டுப் பெறுகிறது.

நம் தமிழ்ப் படங்களில் எது எப்படிப் போனாலும் வசனம் 'பளிச்' என்று அமைந்து விடுகிறது. ''வாக்குறுதி''க்கு வசனம் எழுதியிருப்பவர் சின்னதுரை. வசனம் கருத்துடன் அமைந்திருக்கிறது.

பாடல்களே இல்லாதிருந்து, நடக்கக்கூடிய சம்பவங்களை இயற்கைக்கு முரண்படாமல் தயாரித்திருந்து, கவர்ச்சியில் அதிகக் கவனம் செலுத்தாமல் இருந்து... (என்ன இருந்து, இருந்து...என்கிறீர்களா?) இவை யெல்லாம் இருந்திருந்தால்...? ''வாக்குறுதி''யை ஒரு நல்ல படம் என்றே சொல்லலாம். அத்தைக்கு மீசை முளைத்தால்...?

— காந்தன்



நாகரீகப் போட்டியிலே வீறுநடை போடுகின்றன!

மோதி

# சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகள்,

TERENE 'டெரீன்' இழை கலந்தவை

**ஏறுபோன்ற மிடுக்கு—அதை எடுத்தியம்பும் தீரம். துணிகரமான பாணிகள், கிளர்ச்சியூட்டும் வகைவகையான TWILL ட்வில் சூட்டிங்குகள். எண்ணத்தைக் கிளர்ந்திடும் எண்ணிலா புதுப்புது ரகங்களிலே ஷர்ட்டிங்குகள்.**

சூட்டிங்குகள்—ஹாட்லேன், சரிஸ்மா, ஸாரிபேட், ஓவேஷன், டாபிக்

ஷர்ட்டிங்குகள்—கார்டினியா, கரால் கன்ட்ரி, தெஸ்பியன், டார்பிடோ, ட்ரம்ப் கார்ட்.



மோதி ரேயான் அண்ட் சில்க் மில்ஸ்

பணம் திருப்பித்தரா உத்தரவாதம் அளிக்கும் முதல் மில் இதுவே.

® கெமிக்கல்ஸ் அண்ட் பைபர்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்டின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்




## 24. திரைக்குப் பின்னால்?

"இந்த விஷயத்தில் நான் அவ்வளவு அக்கறை காட்டியதற்கு ஒரு முக்கியமான காரணம் இருக்குது தம்பி!" என்று கூறிய வேதமூர்த்தி, இனி தாம் சொல்லப் போவதை நினைக்கும்போதே சிரிப்பு வந்துவிட்டாற்போல் உடல் குலுங்கச் சிரித்தார். சிரித்துக் கொண்டே பேச்சையும் ஆரம்பித்தார்:

"இப்போ நம்ம நாட்டிலே ஏராளமான அரசியல்வாதிகளும், தொழிற்சங்கத் தலைவர்களும் உற்பத்தியாகியிருக்கிறாங்களே, இவங்கள்ளாம் எப்படி, எதனால், எங்கிருந்து உருவாகி வந்தவங்கன்னு நீங்க நினைக்கிறீங்க? சமூகம் என்கிற ஒரு நாலு பேராலே எது எதற்காகவோ, எப்படியெப்படி எல்லாமோ ஒதுக்கப்பட்டும், பழிக்கப்பட்டும், வஞ்சிக்கப்பட்டும், ஏமாற்றப்பட்டும், தண்டிக்கப்பட்டும், நிந்திக்கப்பட்டும், நிராகரிக்கப்பட்டும் போய், தங்களால் மானத்தோடு வாழ முடியாது என்ற நிலைக்கு உள்ளாகிறவங்கதான், இனி எதையும் செய்து எப்படியும் வாழலாமே என்னும் ஒரு வக்கிரமான துணிவு பெற்று நேரே அரசியலிலோ தொழிற்சங்க அமைப்புக்களிலோ வந்து நுழைந்து கொள்கிறாங்க! இப்போ அந்த அசிஸ்டெண்ட் அக்கவுன்டென்டையே எடுத்துக்குவோம்....."

வேதமூர்த்தி சற்றே நிமிர்ந்து உட்கார்ந்து கொள்ள, நரகவும் அவர் சொல்லப் போவதை இன்னும் கவனமாகக் கேட்கத் தயாரானான்.

"அந்த ஆள் தன் வேலையில் ஏதோ தப்பு செய்தான் என்கிறதுக்காகக் கம்பெனி நிர்வாகத்தினர் அவனை 'டிஸ்மிஸ்' செய்தாங்க. அவனுடைய தப்பான நடத்தையை அந்தக் கம்பெனியின் தொழிலாளர் யூனியன் நியாயமாய்ப் பரிசீலனை செய்து அவனுக்கு ஆதரவு கொடுக்காமல் இருந்திருந்தால் அவன் தன் தப்பை உணர்ந்து திருந்தியிருப்பான்; மன்னிப்பும் கிடைச்சிருக்கலாம். ஆனால் அப்படிச் செய்யலே. முதலில் அவனுக்காக வரிஞ்சு கட்டிக்கிட்டு வேலைநிறுத்தம் செய்தவங்க, அப்புறம் அந்த வேலைநிறுத்தத்தால் தங்கள் எல்லோருக்கும் சில அநுகூலங்கள் கிடைக்கும்னு தெரிஞ்சதும், நிர்வாகத்தினரோடு சேர்ந்து, தனி மனிதனான அவனுக்குக் குழி பறிக்கத் தயாரானாங்க! இப்படித் தனக்குப் பக்கபலமா நிற்க வந்தவங்களே தன்னைக் காலை வாரிவிட்டுவிட்ட நிலையில் வேலையிழந்து போகும் அவன் என்ன செய்வான்? வேறு இடத்தில் அந்த வேலையை அவனால் தேடிக்கொள்ள முடியுமா? அது அவ்வளவு சுலப

மில்லேன்னு அவனுக்குச் சில தினங்களி
லேயே நன்ருகப் புரிஞ்சு போயிடும். அத்
துடன், தன்ஞல் ஒரு பெரிய கம்பெனியே
ஆட்டம் கொடுக்க ஆரம்பிச்ச நிகழ்ச்சி
அவனுள்ளே ஒருவிதமான 'ஹீரோ'
மனப்பான்மையைத் தோற்றுவித்து
விடும். அதனுல் இனி எங்கேயும் யாரிட
மும் போய்க் கைகட்டி உத்தியோகம்
பார்க்கக் கூடாதுங்கிற முடிவுக்கு
அவன் வருவான். ஆனுலும் பிழைப்
புக்கு எதனுச்சும் செய்தாகணுமே! தன்
வேலை பறிபோனது சம்பந்தமாய்த் தனக்

யாகக் கூடாதுன்னு இப்போ நினைப்
பான். அப்படி நினைச்சதைச் செயல்
படுத்திப் பார்க்கவும் இறங்குவான்.
எப்படி?...'' என்று குறும்புப் புன்னகை
யுடன் கண் சிமிட்டிக் கேட்டுவிட்டு
உடனே பேச்சைத் தொடர்ந்தார்
வேதமூர்த்தி.

'' முதலில் அந்தக் கம்பெனியிலே
வேலை பார்க்கும் சில அப்பாவிகளைப்
பிடிச்சு, ஏற்கெனவே இருக்கிற யூனிய
னுக்குப் போட்டியாக இன்னெரு புது
யூனியனை ஆரம்பிப்பான். அதற்கு ஓர்



காக வாதாட முனைஞ்ச தனது தொழிற்
சங்கத் தலைவருடனும், மற்றச் சகாக்
களுடனும் இத்தனை நாட்கள் நெருங்கிப்
பேசிப் பழகி வந்ததால் அவர்களின்
அந்தரங்க நடவடிக்கைகளையும் மனப்
போக்குகளையும் அநுபவரீதியாக அவன்
நன்ருக அறிஞ்சுகிட்டிருப்பான், இல்
லையா? அதனுல் அவங்களைப் போல்
நாமும் ஏன் ஒரு தொழிற்சங்கவாதி

அரசியல் கட்சி வர்ணம் பூசறதுக்காக ஏதாவது ஒரு கட்சிப் பிரமுகரை அழைத்துக் கொண்டு வந்து தடபுடலாய்த் திறப்புவிழா நடத்துவான். அப்புறம் உள்ளே ஒழுங்காக வேலை செய்துக் கிட்டிருக்கிற எவனுவது ஒருத்தனைச் சீண்டு தட்டிவிட்டு ஏறுமாருக நடக்கத் தூண்டி, நிர்வாகத்தினர் அவன் பேரில் நடவடிக்கை எடுக்கும்படியான நிலைமையை உண்டுபண்ணுவான். அதுக்கப்புறம் அந்த விஷயத்தையே ஒரு வியாஜ்யமாக வைச்சுத் தன் யூனியனைச் சேர்ந்தவங்களை வேலைநிறுத்தம் செய்யச் சொல்லுவான். பழைய யூனியனைச் சேர்ந்தவங்க இதற்கு ஒத்து வர மாட்டாங்க. இரண்டு கோஷ்டிகளிடையும் பூசல் புகைச்சல் ஏற்பட்டு ஒண்ணை யொண்ணு தாக்கிக் கொள்ள ஆரம்பிக்கும். இந்தச் சமயம் பார்த்து, முன்னே புதுச் சங்கத் திறப்பு விழா செய்த கட்சித் தலைவன் வந்து தன் கட்சியின் முழு ஆதரவைத் தருவதாகத் தூபம் போட்டுவிட்டுப் போவான். தொழிலாளர்களுக்குள்ளே ஏற்பட்ட இந்தப் பிளவினால் வேலை சரியாக நடக்காமல் இருப்பதைக் கண்டு கம்பெனி நிர்வாகம் கதவடைப்புச் செய்யும். பிறகு சமரசப் பேச்சு ஆரம்பமாகும். பேச்சுவார்த்தை நடத்தறதுக்காக அந்த இரண்டு யூனியன்களைச் சேர்ந்த பிரதிநிதிகளையும் அழைப்பாங்க. முன்பு 'டிஸ்மிஸ்' செய்யப்பட்டவனிடமே கம்பெனி நிர்வாகத்தினர் இப்போ நியாயம் கோருவாங்க! எப்படியோ ஒரு தினுசாகச் சமரசம் ஏற்படும். அதிலிருந்து புது யூனியனுக்கு வலிவு அதிகமாகும். அதனுல் அவனும் தலைவனுக வளர்வான். அந்தத் தெம்பில் இன்னும் சில கம்பெனிகளின் தொழிற் சங்கங்களோடும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வான். அவைகளின் தலைமைப் பீடங்களை மெல்ல மெல்லக் கைப்பற்றுவான். இப்படித் தன் ஆதிக்கத்துக்கு உட்பட்ட சங்கங்களைக் கொண்டு வருஷத்துக்கு இத்தனை வேலைநிறுத்தங்கள் நடத்த வேணும்னு ஒரு 'சார்ட்' போட்டுக்கிட்டு அதன்படி ஒவ்வொரு கம்பெனியிலும் தகராறுகளைக் கிளப்பிவிட்டு வேலைநிறுத்தங்களை ஆரம்பிப்பான். அதனுல் அதிர்ஷ்டவசமாக இரண்டொரு முறை ஜெயிலுக்குப் போய் வந்துவிட்டான்னு அவன் இன்னும் பெரிய தலைவனுகிவிடுவான். உடனே அவனுக்கு நிதி திரட்டிக் கொடுப்பாங்க. இப்படித் தொழிலாளர்களிடம் உண்டியல் ஏந்தியும், சங்க நிதியில் கைவைச்சும், இன்னும் பல வழிகளிலும் துட்டு அடிச்சு மாமியார்பேரில் நிலம், மனைவி பேரில் பங்களா, மச்சினன் பேரில் டாக்சி, மகன் பேரில் கார், மாமனுர் பேரில் சாராயக் கடைக் குத்தகைன்னு வாங்கிப் போட்டுவிட்டு இவன் மட்டும் தோளில் ஒரு துண்டோடு நடந்தே வருவான், நடந்தே போவான். இதற்குள் ஏதாவது ஒரு கட்சியில் சேர்ந்து கட்சிப் பிரமுகனுகவும் அவன் ஆகிவிடுவான். தேர்தல் வரும்; பாட்டாளிகளை யெல்லாம் தனக்கு வோட்டாளிகளாக்கித் தேர்தலில் வெற்றியடைஞ்சு கோட்டைக்குப் போவான். தப்பித் தவறிக் கோட்டையிலே அவனுக்கு ஒரு மந்திரி நாற்காலி கிடைத்து விட்டால்?.... அப்புறம் அவனுடை ஆளுகையில் இந்த நாடு வாழணும்; இந்நாட்டு மக்கள் வாழணும்! ஏற்கனவே தான் இம்மாதிரியானவங்களுடைய ஆட்சியில் கிடைச்ச பலாபலன்களை நல்லா அனுபவிச்சுக்கிட்டு இருக்குதே இந்த நாடு? அதுவும் போதாமல் அப்படிப்பட்ட இன்னும் ஒரு 'மகா தலைவனை' உருவாக்கிவிட வேணுமென்னுதான், அவனை — அந்த அசிஸ்டென்ட் அகவுன்டென்டை — மறுபடியும் வேலையிலே அமர்த்திவிடச் சொல்லி நான் அவ்வளவு தூரம் இன்னிக்கு வாதாடினேன்.''

கசப்புக் கலந்த ஒரு விரக்திச் சிரிப்புடன் பேச்சை நிறுத்திவிட்டு





நரசுவை ஏறிட்டு நோக்கினர் வேதமூர்த்தி.

ஏதோ ஒரு பெரிய சுரங்கத்தினுள் புகுந்து வெளிப்பட்டாற்போல் திகைப்பும் வியப்புமாய் வேர்த்து விறுவிறுத்து உட்கார்ந்திருந்த நரசுவுக்கு மேற்கொண்டு அவரிடம் என்ன கேட்பது என்றே தோன்றவில்லை.

வேதமூர்த்தியின் பார்வை மீண்டும் அந்த அறையைச் சுற்றி ஒரு நோட்டமிட்டுத் திரும்பியது. குறிப்பாக, அந்தக் கதவு இடுக்கைக் கவனித்தது போலவும் தோன்றியது. ''என்ன தம்பி ! பேசாமல் இருக்கிறீங்க? இது பற்றி உங்களுக்கு அபிப்பிராயம் எதுவும் இல்லையா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் அவர்.

தன் கால்சட்டை ஜேபியை மெல்லத் தொடுவதும், நாற்காலியில் நெளிவதுமாக இருந்த நரசு, ''இல்லே, சார் ! அபிப்பிராயம் சொல்கிற அளவுக்கு இம்மாதிரி விஷயங்களில் எனக்கு அநுபவம் இல்லே. ஆனாலும் அந்தக் கம்பெனி, வேலைநிறுத்தம் முடிஞ்சு, திறக்கப் போறது பற்றி நான் ரொம்பவும் சந்தோஷப்படறேன்'' என்று ஏதோ வாய்க்கு வந்ததைக் கூறினன்.

அவனுடைய இந்த அடக்கமான பதில் வேதமூர்த்திக்கு மிகவும் திருப்தி அளித்திருக்க வேண்டும். அவர் அவனைப் பாசப் பரிவுடன் பார்த்து, ''அது போகட்டும். இப்ப உங்ககிட்டே சில விஷயமாய்ப் பேசணும்னு நினைக்கிறேன்......'' என்றவாறு சற்றே ஒருக்களித்து உட்கார்ந்தார்.

இதைக் கேட்டு உள்ளூறப் பரபரப்படைந்து போன நரசு தன் ஜேபியைத் தொட்டுத் தடவியபடி, ''ஆமாம், சார் ! நேத்திக்கு ராத்திரி கூட இதே போலத்தான் சொன்னீங்க, என்கிட்டே ஏதோ விஷயம் பேசணும்னு.....'' என்ருன் குழறலான குரலில்.

இந்தச் சமயம் அறைக்கு வெளியே வந்து நின்ற மனேகரி, ''ஓ..... அப்பா இங்கே இருக்கிறீங்களா?..... கார்ச் சத்தம் கேட்டு இவ்வளவு நேரமாகியும் உள்ளே வரக் காணுமேன்னு எங்கெங்கேயோ தேடிக்கிட்டு வரேன்'' என்று புன்முறுவலுடன் சொல்லிக் கொண்டே தன் தந்தையையும், நரசுவையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு அங்கிருந்து திரும்பிச் சென்ருள்.

இப்படி அவள் வந்து பார்த்துவிட்டுப் போனதிலிருந்து எதையோ புரிந்துகொண்டவர்போல் மெல்லத் தலையாட்டிக் கொண்ட வேதமூர்த்தி, ''சரி: இப்ப தம்பி எங்கேயாச்சும் உலாவக் கிளம்புவாருன்னு நினைக்கிறேன். நான் பேச நினைச்ச விஷயம் அப்படி ஒண்ணும் அவசரமானதில்லே. சாவகாசமாகவும் பேசலாம். முடிஞ்சா இன்னிக்கு ராத்திரியோ, அல்லது நாளைக் காலம்பறவோ பேசுவோம்'' என்று கூறிக் கொண்டே எழுந்தார்.

பெரிய கண்டத்திலிருந்து தப்பியவன் போன்று முக மலர்ச்சியடைந்த நரசு அவருக்கு முன்னே சட்டென்று எழுந்து நின்று கொண்டான். வேதமூர்த்தி அவ்வறையைவிட்டு வெளியே சென்ருர். அவனும் அவர் பின்னல் போய்க் கூடத்து அறையையும் மற்ற அறைகளையும் எட்டிப் பார்த்தான். யாரும் தென்படவில்லை. திரும்பி வந்து கதவைச் சாத்தித் தாழிட்டுக்கொண்டு கட்டிலில் உட்கார்ந்து, பாக்கியத்தம்மாளின் அந்தக் கடிதத்தை அவசரப் பரபரப்புடன் எடுத்துப் படிக்கலானுன்:

''...பல வருடங்களுக்கு முன்னல் எனக்கு நீங்கள் சத்தியம் செய்து கொடுத்த ஒரு வாக்குறுதியை நினைவு படுத்தி, அதனை இனியும் காலம் தாழ்த்தாமல் நிறைவேற்றி என் நெஞ்சுக்குச் சாந்தியளிக்குமாறு வேண்டிக் கொள்ளவே இன்று இந்தக்கடிதத்தை எழுதுகிறேன். இவ்விஷயமாய் ஒரு மாதத்துக்கு முன்னே, அல்லது ஒரு மாதம் பின்னே கூட நான் எழுதியிருக்கலாமே என்று நீங்கள் நினைக்கலாம். ஆனல் இப்போது இதை எழுதுவதன் நோக்கத்தையும் காரணத்தையும் அவசியத்தையும் இன்னும் சில தினங்களில் நீங்களே தெரிந்துகொள்வீர்கள். எனவே, இதற்கு விளக்கம் தராமல் விஷயத்தை மட்டும் எழுதுகிறேன்.......''

நரசுவுக்கு ஒரே ஆச்சரியமாகிவிட்டது. பாக்கியத்தம்மாளின் கடிதம் எழுதும் திறமையை நினைத்தே அவன் அவ்வாறு வியந்தான். அவ்வியப்பு உணர்ச்சியால் கடிதத்திலுள்ள சொற்களின் அர்த்த பாவங்களை உணரத் தவறி

# எழிலரசி-
# ராய்ப்பூர்
# இளவரசி
# யாரோ?

'மிஸ் ஏஷியா 1973'

'மிஸ் ஏஷியா 1973'



ராய்ப்பூர் மில்ஸ்

ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் குரூப்
துணிகள்

CMLB.30.162 B TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எல். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு, சென்னை-1, 76, கிழக்கு மாசி தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1. M/S. சல்வரீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.

விடக் கூடாதே என்ற் எச்சரிக்கையுடன் சற்றே நிதானமாகத் தொடர்ந்து படித்தான்.

''வாழ முடியாதவர்களின் வயிற்றில் பிறந்து, வாழ விரும்பாதவர்களால் வளர்க்கப் பெற்று, வாழ வேண்டும் என்ற துடிப்புடன் வாழத் தெரிந்தவர்களிடம் வந்து சேர்ந்து, வாழத் தெரியாத ஒருவரை நம்பித் தன் வாழ்க்கையையே பலியிட்டுக் கொண்ட பேதை ஒருத்தியின் ஓர் அவல நாடக ஏட்டைத் தயைகூர்ந்து சற்றுப் புரட்டிப் பாருங்கள்! அந்த நாடகத்தில் நீங்கள் எத்தனை முக்கியமானதொரு பாத்திரத்தை ஏற்றிருக்கிறீர்கள் என்பதையும் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள்! அவற்றையெல்லாம் ஓரளவாவது நினைவுகூர்ந்தால்தான் எனது இவ் வேண்டுகோளுக்குச் சிறிதேனும் இரக்கம் காட்டி அதை நிறைவேற்றத் தாங்கள் பெரிய மனம் கொள்வீர்கள். ஆம்; நீங்களெல்லாம் பெரும் பெரும் காரியங்களைச் சாதித்தவர்கள், பெரிய பெரிய தியாகங்களைப் புரிந்தவர்கள், பெரிய பெரிய தத்துவங்கள் பேசுகிறவர்கள்.. இப்படிப்பட்ட பெரிய மனிதர்கள், வாழ்க்கை என்னும் மகாநதியின் ஓரத்தே, பேரலைகளாலும் சிற்றலைகளாலும் எப்படியெப்படியெல்லாமோ அடித்துப் புரட்டி வரப்பட்டு ஒதுக்கப் பட்டுக் கிடக்கும் சின்னஞ்சிறு கூழாங்கல்லைப் போன்றவளான அபலைப் பெண் ஒருத்திக்கு, எந்தக் காலத்திலோ கொடுத்த ஒரு வாக்குறுதியை நினைவில் வைத்திருக்க முடியும் என்றோ, அதை நிறைவேற்றக் கூடும் என்றோ அவ்வளவு உறுதியாக எதிர்பார்க்க இயலாது அல்லவா?...''

நரசுவுக்கு நெஞ்சை அடைப்பதுபோல் இருந்தது. கண்கள் பனித்தன. அந்த ஏழை பாக்கியத்தம்மாள் கண்ணீரும் கம்பலையுமாய்த் தன் எதிரே நிற்பது போன்ற ஒரு பிரமையும் அவனுக்கு ஏற்பட்டது. சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு பரபரப்புடன், சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுச் சற்று வேகமாகவே அந்தக் கடிதத்தைப் படிக்கலானான்:

''...இப்படியெல்லாம் எழுதுவதற்காகத் தயைகூர்ந்து என்னை மன்னித்தருளுமாறு வேண்டிக் கொண்டு இப்போது விஷயத்துக்கு வருகிறேன். நான் வாழ்க்கையில் பல சோதனைகளுக்கு உள்ளானவள். அவற்றில் பலவற்றை வென்று வாகை சூடியும் இருப்பவள். அவ்வாறே எனக்கு ஏற்பட்ட ஒரு பெரும் சோதனையை வெல்லும் வாய்ப்பும் வலிவும் இருக்கின்றன என்பதைப் புரிந்து கொண்டு நான் நிமிர்ந்து நிற்க முனைந்தபோது, நீங்கள் அச்சோதனைக்கு என்னை உள்ளாகி விடும்படியும் அதனை எதிர்த்து வெல்ல முயல வேண்டாம் என்றும் வேண்டிக் கொண்டீர்கள். உங்கள் வேண்டுகோளை நான் மீற முற்பட்டால் என் கையிலிருந்த ஒரு பொக்கிஷத்தின் எதிர்காலம் பாதிக்கப்படும் என்பதற்கான பல நியாயங்களை எடுத்துக் கூறி என்னை எச்சரித்தீர்கள். என் கடந்த காலத்தை எண்ணிப் பார்த்த போது உங்களுடைய எச்சரிக்கை என்னுள் ஒருவித பயத்தை உண்டுபண்ணி விட்டது. அதனால் நான் பெரும் தியாகம் ஒன்றுக்குத் தயாரானேன். உங்கள் யோசனைப்படி அந்த என் பொக்கிஷத்தை — அதற்கு முன் நான் அடைக்கலம் புகுந்து வெளியேறிய அதே இடத்திலேயே கொண்டு போய் — அடைக்கலப் பொருளாக்கி விட்டு வந்தேன். அன்றைய் தினம் நீங்கள் என்னிடம், 'உனது இந்தப் பொக்கிஷத்தை உரிய இடத்தில் உரிய பாதுகாப்போடு ஒப்படைப்பேன்' என்னும் வாக்குறுதியை அளித்தீர்கள். அவ்வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டிய காலம் வந்து விட்டது...''

கண்ணிமைகள் படபடவென்று துடிக்க, ஆவலும் பரபரப்புமாகக் கடிதத்தின் கடைசி வரிகளைப் படித்தான் நரசு.

''ஆமாம்; அந்த என் உயிரினுமினிய அரும் பொக்கிஷமான அன்பு மகள்



பார்த்தசாரதி சுவாமி சபா பரத நாட்டியக் கலைஞர்களுக்கு உற்சாகமளிக்கும்வித மாக ஒரு நாட்டிய விழாவை நடத்தியது. எட்டு நாள் விழாவில், குமாரி மீனாட்சி சபாநாயகம், குமாரி நந்தினி கிருஷ்ணமூர்த்தி போன்று பிரபலமடைந்துவிட்ட நடன மணிகளுடன் முன்னணிக்கு வந்து கொண்டிருக்கும் பல இளம் கலைஞர்களுக்கும் வாய்ப்பளித்து அவர்களுக்கு ஊக்கம் அளித்தது. தொடக்க தினத்தன்று போலீஸ் கமிஷனர் திரு ஜேனும் தலைமை தாங்கி அன்று நடனமாடிய குமாரி ராதா வேங்கடராமனை பாராட்டினர்.

புஷ்பககந்திக்கு இப்பொழுது வயது இருபதாகப் போகிறது. ஆகவே, உங்கள் வாக்குறுதிப்படி அவளை—அவள் அடைக்கலமாகியிருக்கும் இடத்தில் இனியும் விட்டு வைக்காமல் — உடனடியாக மீட்டுக் கொண்டு வந்துவிடுமாறு மன்றாடி வேண்டிக் கொள்கிறேன்...''

கதவு தட்டப்படும் ஓசை கேட்டுத் திடுக்குற்று எழுந்து தன் கையிலிருந்த கடிதத்தை அவசரமாக மடித்த நரசு, சட்டென்று அதை மறுபடியும் பிரித்துத் தலைப்புப் பக்கம் பார்வையை ஓட்டினான். மாயூரத்திலிருந்து சென்னைக்கு அவன் பயணமான நாளின் தேதி அதில் குறிக்கப்பட்டிருந்ததைக் கண்டு மெல்லத் தலையாட்டியபடி, உடனே மடித்து உள் கதவிடுக்கிலே முன் இருந்தாற்போல் செருகி வைத்துவிட்டு விரைந்து வந்து வாசற்கதவைத் திறந்தான். அங்கே, காப்பிக் கோப்பையை ஓர் அழகிய தட்டில் ஏந்தியவாறு நின்றிருந்தாள் புஷ்பககந்தி.

அவளைப் பார்த்துத் திகைப்புடன் ஓரடி பின்னால் நகர்ந்து கொண்ட நரசு, ''.... காப்பியா?'' என்று கேட்டான் சற்றே திணறலாக.

அவள் அறைக்குள் வரத் தயங்குவது போல் அங்கேயே நின்றாள். அதைப் புரிந்து கொண்ட நரசு ரொம்பவும் சகஜமாக அவளிடமிருந்து காப்பியை வாங்கிக் கொண்டு போய் மேசையின் மேல் வைத்துவிட்டுத் திரும்பினான். அவனுக்கு ஏனோ அவளுடைய முகத்தை நன்றாகப் பார்க்கவும், அவளிடம் ஏதாவது இரண்டு வார்த்தைகள் பேசவும் வேண்டும் என்ற ஒரு விசித்திரமான ஆசை எழுந்தது.

''நீ காப்பி, டிபன் சாப்பிட்டு விட்டாயா சுகந்தி?'' என்று இதமான புன்முறுவலுடன் கேட்டான்.

''இல்லே...'' என்றாள் அந்தப் பெண் சாதாரணமாக. ''எனக்கு அதெல்லாம் பழக்கமில்லே; அதனால் வேண்டாம் என்று சொல்லி விட்டேன்.''

அவளுடைய முக பாவம், பேசும் விதம், நிற்கும் நிலை எல்லாமே நரசுவின் மனத்தை என்னவோ செய்தது. இன்னும் கொஞ்ச நேரம் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தால் அழுகையே பீரிட்டுக் கொண்டு வந்து விடும்போல் ஆயிற்று. ஏன் இத்தகைய துயர உணர்ச்சி தன்னுள் பொங்குகிறது என்பதற்குக் காரணத்தையும் அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ''ஓ... கான்வெண்டில் காப்பி, டிபன் கொடுக்கிறதில்லையாக்கும்! நல்ல பழக்கம் தான். காப்பி உடம்புக்குக் கெடுதல்; ஆனால் பலகாரம் சாப்பிடலாமே!''

அவள் பின்னால் திரும்பிப் பார்த்துவிட்டு ஏதோ பெரிய விஷயம் ஒன்றைச் சொல்லப் போகிறவள் போல் கண்களை மலர்த்தி, ''அது மட்டுமில்லே! எனக்கு இந்த வீட்டுச் சாப்பாடு, பலகாரம் எதுவுமே பிடிக்கலே. ஏன்னா, நான் காரம், புளிப்பு, கரிப்பு, தித்திப்பு இவைகளை அதிகம் சாப்பிட்டுப் பழக்கமில்லே. கால் அளவு, அரை அளவு தான் சாப்பிடுவேன். இங்கே எதை வாயில் வைச்சாலும் ஒரே காரம், புளிப்பு, தித்திப்பு!'' என்று இரகசியக் குரலில் கூறி முகத்தைச் சுளித்தாள்.

''அப்படியா?'' என்று அனுதாபத்தோடு கேட்டு, மெல்லச் சிரித்த அவன், ''பரவாயில்லே; இன்னும் கொஞ்ச நாட்களில் எல்லாம் பழக்கப்பட்டுப் போயிடும்'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே, வெளியே காம்பவுண்ட் கேட் திறக்கப்படும் 'கிரீங்' ஒலி கேட்டதால் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தான்.

அச்சக் குறுகுறுப்புடன் அங்குமிங்கும் பார்த்தவாறு தயங்கித் தயங்கித் தன் வழக்கமான வேட்டைக்காரன் நடை நடந்து உள்ளே வந்து கொண்டிருந்தான் திருமலை. (தொடரும்)

# நல்ல அம்மா, நல்ல அப்பா

ஆர். பத்மா

என்ன நடக்கக் கூடாதது நடந்து போச்சு இன்னிக்கு ஆத்திலே? ஏன் இப்படி ஒரே அமைதியாயிருக்கு ?

மெள்ள அப்பாவைப் பார்க்கிறேன். முகமெல்லாம் செவந்து போய், ஒலகத்துச் சுமையெல்லாம் தம் தலைமேலே விழுந்துட்டதைப் போலத் தலையைப் பிடிச்சுண்டு ஈஸிசேரிலே கண்ணை மூடிண்டு படுத்துண்டு இருக்கிறார். மூடிய விழிகளின் இமைக் கோடியிலே பளபளக்கிறதே ? அது என்ன கண்ணீரா ? அப்பா அழுறார்!

அடுப்படியை எட்டிப் பார்க்கிறேன் நான், அப்பாவைச் சித்த நாழி படுக்கவிடாம, ஒவ்வொண்ணுக்கும் பிரலாபிக்கும் அம்மாவுக்கு என்ன வந்தது இன்னிக்கி ?

ரேடியோவை அலற விட்டுவிட்டு, ஆபீசுக்குப் போற வரைக்கும் ஆபீசரின் தினசரி அவதாரங்களை ஜோக்கடித்து அட்டகாசம் செய்யும் தம்பி சீனி ஏன் ஆபீஸுக்கு சீரியஸாகக் கிளம்புகிறான் இன்னிக்கு ?

என்னைச் சுற்றி உள்ள உலகம் ஏன் இன்னிக்கு ஒரு குற்ற உணர்வோடு நடந்து கொள்கிறது? ''அப்பா! ஒரு டம்ளர் மோர் கொண்டு தரட்டுமா ?'' என்கிறேன், நான் தலையை வாரிக் கொள்ள எண்ணெயை எடுத்துண்டே. அப்பா 'உம்... உம்....' என்று முனகுகிறார். ''அம்மா ! அப்பாவுக்குக் கொஞ்சம் அந்த 'வொய்ட் வாட்ட' ரைக் கொடேன்'' என்கிறேன். அம்மா என்னுடைய ஹாஸ்யத்தைப் புரிந்து கொள்



அடுத்த அதிசயம் ; மாது தரை அதிராம நடந்து வந்து தானே சாப்பாட்டுத் தட்டை வச்சுக்கிறாளே ! கையிலே இணை பிரியாமல் இருக்கும் கதைப் புத்தகம் எங்கே ? ''இலையைப் பார்த்துச் சாப்பிடேண்டி! சாப்பிடச்சேகூட என்ன கதைப் புத்தகம்''னு அம்மா கத்த, ''உனக்கேன், இதெல்லாம் ? இருக்கிறதைக் கொட்டிட்டுப் போயே''ன்னு மாது அலறத் தினம் நடக்கும் சிறு பூசல் இன்னைக்கு எங்கே போய் ஒளிஞ்சிண்டது?

ளாம 'உம்..... உம்'ன்னு மௌனமிண்டே வலை பீரோவுக்குப் போகிறாள்.

சாதத்தை விழுங்க மறுக்கும் ஜோதியின் முதுகில் ரெண்டு சாத்தும் கோமுவைப் பார்க்கிறேன். தெனம், சிரிச்சு, சிரிச்சுக் கதை சொல்லிச் சாதம் ஊட்டும் பொறுமைசாலியான கோமுவின் முகத்தில் என்ன வேதனை ? ''நிதானமா அடுத்தாத்து நாய்கிட்டே கொண்டு வைச்சுண்டு ஊட்டேண்டி கோமு'' என்கிறேன் நான்; என்னைப் பார்த்துக்

கண்ணைத் தொடைச்சண்டு குழந்தையைத் தூக்கிண்டு போறுளே, ஏன்?

எனக்கு — முப்பத்து ஐந்து வயதான எம்.ஏ. பட்டதாரியான, மாசம் எழுநூற்று ஐம்பது ரூபாய் சம்பளம் கனேயாய் வாங்கும் பொருளாதாரப் பேராசிரியையான எனக்கு— இன்னைக்கு என்ன வந்துட்டுது ?

இன்னிக்கு என்ன வந்தது ? எல்லோரும் அமைதியா யிருக்காளே?

ஆமாம், பிரமாதமா ஒண்ணுமில்லே ; மாயவரத்துக்காரரும், பெங்களூர்க்காரானும் கடிதாக போட்டுட்டா ! வரலேயே வரலே யேன்னு தெனமும் காத்துண்டு இருந்த கடிதாக வந்தேவிட்டது. ஆமாம் ! முப் பத்தி அஞ்சு வயசான 'என்னைப் பெண் பார்த்துட்டுப் போன ரெண்டு பிள்ளை வீட்டாரும் பதில் போட்டுட்டா !

''பெண் எம். ஏ. படிச்சவ, பார்க்க நன்னு கம்பீரமா இருக்கிறவ; கைநிறையச் சம்பளமும் வருஷந்தோறும் இன்கிரிமெண் டும், இன்னும் பேப்பர் கரெக்ஷன், எக்ஸா மினர்ஷிப் என்று வருவாயும் வரக் கூடிய அனுகூலங்கள் உள்ளன. இவை தவிர, பிராவி டெண்ட் பண்டு, இன்ஷூரன்ஸ், போஸ்டா பீஸ் டைம் டெபாசிட், இந்தியன் பாங்கிலே சேவிங்ஸ் அக்கௌண்ட் உள்ள பெண். எல் லாம் திருப்திகரம்.

வேலைக்குப் போன நான் முதலா அம்மா சீட்டுப் போட்டே சேர்த்த வெள்ளி, எவர் சில்வர் பாத்திரங்கள் ஒவ்வொரு தடவையும் பேப்பர் வால்யூவேஷன், இன்கிரிமெண்ட் எல்லாம் சேர்ந்து பெரிய தொகை கிடைச்ச போதெல்லாம் வாங்கிய நகைகள் எல்லாம் ரொம்ப ரொம்பத் திருப்திகரம்.

எல்லோருக்கும் நம்பிக்கை. காலம் கடந்த பிற்பாடாவது கடமையைச் செய்ய முடிகிற தேங்கிற நிம்மதி அப்பாவுக்கு.

வீட்டிலுள்ள ஒவ்வொருவருமே ராஜியின் கல்யாணம் குதிர்வதை எண்ணிப் பலவித மான கனவுகளில் மூழ்கி யிருந்தனர்.

எல்லோருடைய நம்பிக்கையும் தகர்ந்து போச்சு. 'இந்தச் சம்பந்தம் நடக்கப் பிராப் தம் இல்லையாம்.' மாயூரம் மனுஷர் எழுதி விட்டார். 'பொண்ணுக்கு வயசு கூட; இன் னும் கொஞ்சம் வயசு வித்தியாசத்திலே இருந்தால் தேவலேன்னு என் அகத்துக்காரி அபிப்பிராயப்படறு!' நாற்பது வயது வாலி பரின் தகப்பனர் எழுதிய கடிதாக இது. ஜாதகம் வாங்கும்போது வயசைப் பார்க் கல்லையா?

''பெண் முப்பத்தி அஞ்சு வயசாக இருந் தாலும் பார்வைக்குச் சின்னவளாக வயசு தெரியாம இருக்கும்னு நம்பிண்டு வந்தேன். உம்ம பெண் என் பையனைக் காட்டிலும்



வளர்த்தி. பொருத்தமாக இருக்காது.'' நாற்பத்தி ஆறு வயதும் ஐந்து அடி ஓரங்குலம் உயரமும் கொண்ட பெங்களூர் அழகனுடைய தகப்பனார் கடிதாக.

ஆக எனக்கு வயசாகிவிட்டதுங்கிற உண்மை இவா சொல்லித்தான் தெரியணுமா என்ன? வயசு ஆனாலும் இளமையா எத்தனை நாளைக்கு இருக்க முடியும்? இவா பிள்ளையின் வழுக்கைத் தலையையும், நரைச்ச கிராப்பையும், பெல்டிலே அழுந்திக் கிடக்கிற வயத்தையும் மறந்து போயிட்டாளா?

அஞ்சு குழந்தைகள் உள்ள குடும்பத்திலே மூத்த பொண் நான். எங்க அப்பாவுக்குத் தாலூக்கா ஆபீஸிலே கிளார்க்கு வேலை. ஆத்திலே நாங்க அஞ்சு குழந்தைகளைத் தவிரப் பாட்டியும் உண்டு. தாத்தாவை நாங்களெல்லாம் பார்த்தது கிடையாது. எம்பேரிலே பாட்டிக்குத் தனிப்பட்ட ஆசை. தாத்தா செத்துப்போன பத்து நிமிஷத்துக்கெல்லாம் நான் பொறந்தேனும். தாத்தாவுக்குப் பெண் குழந்தைன்னு ரொம்ப ஆசையாம். தாத்தாவே நம்மாத்துக்கு வந்துட்டார்னு பாட்டிக்கு நம்பிக்கை. அதனாலேதான் என் பேர் ராஜம்னு வைச்சா. எங்க தாத்தா பேர் ராஜமய்யங்கார்; பாட்டி என்னைப் 'பாப்பா'ன்னுதான் கூப்பிடுவா. தாத்தா பேரைச் சொல்ல மாட்டா.

நான் எஸ்.எஸ்.எல்.ஸி.யிலே நானூத்தித் தொண்ணூறு மார்க்கு. பக்கத்தாத்து வக்கீல் மாமா சொன்னார்: ''பேசாமே உள்ளூர் காலேஜிலே சேரேண்டி. அப்புறம் மெடிக்கல்லே சேர்த்துடலாம்.''

''அதுக்கெல்லாம் நமக்கு ஏது திராணி? பேசாமல் ரெண்டு வருஷம் டைப்பு லிபிப்பு அடிச்சுண்டு இருக்கட்டும். கொழந்தையை நல்ல இடமாப் பார்த்துக் கல்யாணத்தை பண்ணிவிடலாம். ஏதோ பூர்விகமா இந்தக் குடிசை ஒண்ணு இருக்கு'' என்றார் அப்பா. பாட்டியும் அன்னைட அசலிலே பேத்திக்கு வரன் தேட ஆரம்பிச்சா. நான் எந்த விதக் கவலையும் இல்லாமே டைப் கத்துக்கப் போனேன். அப்பா வரனும் தேடிண்டு இருந்தார். அப்பா வீட்டை அடமானம் போட்டு ஐயாயிரம் ரூபாய் வரைக்கும் செலவு செய்யத் தயாராக இருந்தார்.

ஜாதகங்கள் வந்துண்டே இருந்தன. அப்பாவும் ஜோசியர் மாமாவாத்துக்குக்குத் தெனம் போவா. எல்லாத்துக்கும் உற்சாகம். பாட்டி, பேத்தி கல்யாணத்துக்குப் பிற்பாடுதான் பிராணனை விடறதுன்னு நிர்மானிச்சுண்டுட்டா. சில ஜாதகங்கள் பொருந்தின. அவற்றிலே அதி சிரேஷ்டமா, வெகு பிரமாதமா, ஆயுள் பாவம், அதிகாரம் நிறைஞ்ச ஒண்ணை ஜோஸியர் மாமா பொறுக்கித் தந்தார்.

அன்னிக்கு ஆத்திலே ஒரே கொண்டாட்டம்! அம்மா பஜ்ஜி, சொஜ்ஜி பண்ணினா. பெண் பார்க்கும் படலம் சம்பிரமமாக முடிந்தது. ஊருக்குத் திரும்பிப் போனவர்களிடமிருந்து பெண் பிடித்திருப்பதாகக் கூறி லௌகிகத்துக்கு ஒரு லிஸ்ட் வந்தது. கையிலே ரொக்கமா மூவாயிரம் ரூபாய் வரதட்சிணையாகவும், பையனுக்கு டிரஸ்-க்கு ஆயிரம் ரூபாயும், பெண்ணுக்கு இருபதுபவுன் நகை, ஒரு குடும்பத்துக்கு வேண்டிய வெள்ளிப் பாத்திரம், (இரண்டாயிரம் ரூபாய் மதிப்பு) அப்புறம் எவர்சில்வர், பித்தளைப் பாத்திரங்கள், பட்டுப் புடவைகள், கட்டில், நாற்காலி... லிஸ்ட் நீண்டது.

அப்பா கடிதாசைப் பார்த்ததும் ஸ்தம்பித்து விட்டார். அப்பா இடிந்து போனதைக் கண்ட அம்மா, ''வேண்டாம் போங்கோ இந்தப் பணப் பிசாசுகளோட சம்பந்தம்! நம்ம குழந்தைக்கு என்ன விடிய விடியப் பதினேழு வயசு ஆகலே; எல்லாம் நல்ல மனுஷாளா நமக்கு வருவா! அவ ஜாதகம் ஒசந்த ஜாதகம்'' என்று சமாதானம் செய்து கொண்டு அடுத்த ஜாதகக் கட்டை அப்பாவின் கையில் தந்தாள் அம்மா.

அப்பா இந்த ரெண்டு வருஷங்களிலே ரொம்ப தளர்ந்து போயிட்டா. அவருக்கு ஒரே வெறுப்பு.

'பிள்ளையைப் பெத்தவா அத்தனை பேரும் நரகத்துக்குத்தான் போவா; இப்படிப் பெண்களோட வயித்தெரிச்சலைக் கொட்டிக்கிறதுக்கு' — இது அம்மா கொடுக்கிற சாபம்.

உள்ளூர் காலேஜிலே எனக்குக் குமாஸ்தா வேலை கிடைச்சுட்டுது. என்னோட படிச்சவாளெல்லாம் காலேஜிலே படிக்கச்சே, நானும் காலேஜுக்குப் போனேன், குமாஸ்தாவாக. எனக்கு ஒண்ணும் வருத்தமில்லே. பாட்டிக்கு உடம்பு ரொம்ப முடியல்லே. அப்பாவும் வரன் விஷயமா லீவு போட்டுட்டு ஊர் ஊரா அலையும்போது எனக்கு வேலை கிடைச்சது ஆத்துக்குக்கொஞ்சம் சௌகர்யம்.



காலம் ஓடிண்டே யிருந்தது. அப்பா கிடையராயிட்டார். என் ஜாதகத்தை உள்ளூர் பிரஸிலே கொடுத்து மங்களகரமா, பச்சை, மஞ்சள் வர்ணத்திலே நூறு காப்பி எடுத்தார். பேப்பரிலே வர்ற 'மாட்ரிமோனியல்' விளம்பரத்துக்கெல்லாம் கடிதாக போட்டுண்டு இருந்தார்.

நான் பிரைவேட்டாகப் படிச்சே பி. ஏ. வாங்கிட்டேன். அப்பாவுக்கு இப்போ புதுக் கவலை—பி. ஏ. படிச்ச பொண்ணுக்கு கிராஜுவேட்டா மாப்பிள்ளை பிடிக்கணுமேன்னு; வரதட்சிணை ரேட்டும் கூடுமேன்னு. ஆமாம்; அந்த ரேட்டும் ஏறிடுத்து. நான் கவலை இல்லாமே ஒவ்வொரு பிறந்த நாளைக்கும் புடவை வாங்கிண்டேன். அம்மா வடை, பாயசம் பண்ணினா. அப்பா கோவில்லே எம் பேரிலே அர்ச்சனை பண்ணினார். குழந்தைகள் பரிசுகள் கிடைக்கிறதேங்கிற ஆசையிலே எப்போ என் பிறந்த நாள் வரும்னு ஏங்க ஆரம்பிச்சுட்டா.

''ஒவ்வொரு வருஷமும் ராஜிக்கு வயசாயிண்டே வரதே? அவளை யொத்தவாளுக்கெல்லாம் பிள்ளையும், பொண்ணும் பொறந்துட்டதே. ஏழுமலையானே! இந்தத் தை மாசத்திலே வழி பிறக்கணும்'' அம்மாவின் தினசரி பிரார்த்தனை இது.

நான் எம். ஏ. பட்டதாரி ஆனேன். என் அதிர்ஷ்ட ஜாதகம் எனக்குப் பெரிய வேலையும் கிடைச்சுது.

ராது என்னைவிட இரண்டு வயசுதான் சின்னவள். ஆனா அவளுக்கு இருந்த உணர்வுகள் பெரிசு. அவள் எத்தனை நாட்கள் எனக்காகப் பொறுத்துண்டு இருந்தாளோ? ஒரு நவராத்திரி லீவிலே காலேஜிலே சுற்றுப் பயணம்னு போனாள். திரும்பி அவள் வரல்லே. கடிதாக ஒண்ணு வந்தது. ''நீங்களா எனக்கு என்னிக்கிக் கல்யாணம் பண்ணறது? நம்முடைய சமூகத்திலே சுலபமாச் செய்யற காரியம் இல்லேன்னு ராஜி விஷயத்திலேருந்து தெரிஞ்சுண்டேன். நான் ராஜி மாதிரி இருக்கத் தயாராக இல்லே. வரதட்சிணையை எதிர்பார்க்காமே, என்னை எனக்காகவே ஏத்துண்ட ஓர் உத்தம புருஷரை நான் பதிவுத் திருமணம் பண்ணிண்டு நம்ம சமூகத்திலே இருந்து போறேன். ஆமாம்! அவர் நம்ம ஜாதியில்லே. எனக்காக யாரும் கவலைப்பட வேண்டாம்.''

கடிதாசை வைச்சுண்டு அம்மாதான் புலம்பினாள். அப்பா காறித்துப்பிவிட்டுக் குளிக்கப் போய் விட்டார். எனக்கு ஒண்ணுமே புரியவில்லே.

அப்போ நம்முடைய குலத்துக்குப் பங்கம் வராமல் இருக்கணும்னு நாம் கன்னியாகத் தான் இருக்க வேண்டும். ஏன்னு வரதட்சிணை கொடுத்து நம்ம ஜாதியில் கல்யாணம் நடக்கிறது எல்லாருக்கும் முடியாது. மத்தவனைப் பண்ணிண்டா கேவலம்! என்ன சித்தாந்தமோ?

ஒரு வருஷம் ஓடி மறைஞ்சது. அடுத்தாத்து வக்கீல் மாமியின் தங்கை பிள்ளை ஜாதகம் கிடைச்சது. மாமி சொன்னா: ''ராஜிக்கு வரன் கிடைக்கிறது கஷ்டம். பேசாமல் கோமுவுக்குப் பண்ணிப்பிடுங்கோ!'' அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சம்மதம் இல்லே. ஆனா ராது மாதிரி கோமுவும் போக வேண்டுமா? நானே பிடிவாதமா இன்ஷூரன்ஸ், பிராவிடெண்ட் பண்ட் எல்லாத்திலேயும் கடன் வாங்கி நன்றாகச் செலவு செய்து கோமுவுக்குக் கல்யாணம் செய்து வைத்தேன். ராதுவினுடைய நடத்தை கோமுவின் வாழ்க்கையைப் பாதிக்காமல் இருக்க நிறையச் செலவு செய்தேன். இல்லாட்டா நடக்குமா காரியம்?

அப்பாவுக்கும் இப்போதெல்லாம் என்னுடைய தகுதிக்குத் தகுந்த இடத்தைத் தவிர வேறு இடத்தைப் பார்க்கிறதிலே விருப்பமில்லே. ''வயசென்ன வயசு! ஆனா இன்னும் பெரிய ஆபிசராப் பார்த்தாப் போச்சு. நம்ப ராஜி ஜாதகத்துக்குத் தன்னாலே பெரிய வேலைக்காரன் வருவான்.''

இப்படித்தான் காலம் போயிண்டு இருந்தது. எத்தனையோ பேச்சு வார்த்தைகள். வெறும் பேச்சு வார்த்தைகளே. அப்பாவும் ரொம்ப நம்பிக்கையுடன்தான் இருந்தார்.

கடைசியாக இந்த மாயூரமும், பெங்களூரும் வந்தன. எல்லாம் முடிவாயிற்று. பெண்ணைப் பார்த்து முடிவு சொல்ல வேண்டியதுதான்.

அவா வந்தா; முன்பு போல அவா என்னைச் சேவிக்கச் சொல்லவில்லே. என்னைப் பாடச் சொல்லவில்லே. என் பிரமோஷன் சான்ஸைப் பத்திப் பேசினா. அப்பாவுக்கு ரொம்பவும் திருப்தி இல்லா விட்டாலும் ஏதோ இது வரையிலும் வந்துட்டதே என்ற நிம்மதி. எனக்குப் படிப்பு இருக்கு, பதவி இருக்கு, எல்லாத்தையும் விட வரதட்சிணை தரக்கூடிய 'ஸ்டேட்டஸ்' இருக்கு. என்னை 'வேண்டாம்' என்று சொல்ல என்ன இருக்கு?

வயசாயிடுத்தாம்! ஈடு இல்லையாம்! பொண்ணுக்கு வயசாறதுக்கு யார் காரணம்? வரதட்சிணைப் பேரத்திலே பிள்ளை வீட்டாரெல்லாம் போட்டி போட்டுண்டு காலம் கடத்தினா, பெண்ணெல்லாம் கிழவியாகாமல் குமரியாகவா இருப்பா? ஏன்தான் அவா கடிதாசைக் கண்டு இவா இப்படி கஷ்டப்படறாளோ? நாற்பது, நாற்பத்தைந்து வயசுப் பையனை வைச்சுண்டு அவா தைரியமாக இருக்கும்போது, நம்மாத்திலே எனக்கு முப்பத்தி அஞ்சு வயசு ஆயிடுத்துன்னு இவா ஏன்தான் கவலைப்படறாளோ? நல்ல அப்பா, நல்ல அம்மா!

# மனம் திருந்தினேன்



"டாக்டர் கேசவன் கண்ணுக்கு லட்சண மானவர். ஐந்தாறு வருடங்கள் என்னுடன் கண்ணியமான முறையில் பழகியிருந்தார். காதலில் ஆரம்பித்துக் கல்யாணத்தில் முடிந்தது. ஆனால் காதலில் ஆரம்பமாகிய உறவு கசப்பாக மாறிவிடும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை...'' டாக்டர் பிரியம் வதாவின் குரலில் சோகம் கவிந்திருந்தது.

''அப்படி என்னதான் நடந்தது? விளக்க மாகச் சொல்லுங்கள், டாக்டர்!'' என்றேன் மிகுந்த அனுதாபத்துடன்.

''நான் இரு குழந்தைகளுக்குத் தாயாகி விட்ட பிறகு எப்படியோ எங்கள் இல்வாழ்க் கையில் புயல் வீசத் தொடங்கிவிட்டது...''

''அமைதி குலையக் காரணம்?''

''நான் ஓர் 'அனெஸ்தெடிஸ்ட்' ஆகப் பணியாற்றி வந்தேன். அறுவைச் சிகிச்சைக்கு மயக்க மருந்து கொடுப்பார்கள் அல்லவா? இரு 'நர்ஸிங் ஹோம்'களுக்குச் சென்று அன்றாடம் நோயாளிகளுக்கு மயக்க மருந்து கொடுக்க வேண்டும். இது தவிர ஓய்வு நேரத் தில் வீட்டிலேயே பிராக்டீஸ் செய்து வந் தேன். என் கணவர் தாம் டாக்டராகப் பணி யாற்றும் மருத்துவ மனைக்குச் செல்லும் போதே என்னையும் அழைத்துக் கொண்டு போய் நர்சிங் ஹோமில் விட்டுச் செல்வது வழக்கம். நர்ஸிங் ஹோம் வைத்திருந்த டாக் டர் எங்கள் தெரு வழியாகத்தான் தம் முடைய நர்ஸிங் ஹோமுக்குப் போக வேண் டும். சில நாட்கள் அவரே எங்கள் வீட்டுக்கு

# ஒரு முக்கோணச் சோகக் கதை!



அபின் தயாரிக்க உதவும் பாப்பிச் செடி.

வந்து தேநீர் சாப்பிட்டுவிட்டு என் கணவ ருடன் சில வார்த்தைகள் பேசிவிட்டு என் னைத் தம் காரிலேயே நர்ஸிங் ஹோமுக்கு அழைத்துச் சென்றுவிடுவார். அங்கு வேலை முடிந்த பிறகு இன்னொரு நர்ஸிங் 'ஹோ முக்கு டாக்ஸியில் போய்விடுவேன். சில தருணங்களில் டாக்டரே வீடு திரும்பும் வழி யில் என்னை என் வீட்டில் விட்டுச் செல்வதும் உண்டு. ஆரம்பத்தில் சில வருடங்கள் வரை, யில் எல்லாம் ஒழுங்காகத்தான் நடந்து வந்தது...''

''அப்புறம்?...''

''அப்புறம் என் கணவர் என்மீது சந்தேகம் கொள்ளத் தொடங்கினர். வெகு காலம் மனத்துக்குள்ளேயே புழுங்கினர். பிறகு ஜாடை மாடையாக என் காதுபடக் கூறினர். நான் நர்ஸிங் ஹோமுக்கு அந்த டாக்டரின் காரில் போவதை நிறுத்திக் கொண்ட பிறகும் என் கணவரின் சந்தேகப் பேய் அவரை விட்டு அகலவில்லை. நாளடைவில் அவரது சந்தே

கம் விசுவரூபம் எடுத்து அவரை ஆட்டிப் படைத்தது. என் வாழ்க்கையே நரகமாகி விட்டது!''

''உங்கள் குழந்தைகள்...?''

''மூத்தவள் பெண். ஆறு வயது. அடுத்தவனுக்கு நான்கு வயது. அவர்களுக்காகவே நான் உயிர் வாழ வேண்டியிருந்தது. என் கணவரின் கடு சொற்களைத் தாங்க மாட்டாமல் தவித்துத் தடுமாறினேன். என் வேதனை ஒரு நாள் எல்லை மீறிப் போகவே தலைவலி குடைந்தெடுத்தது. மனஉளைச்சல் ஒரு பக்கம். இவற்றை மறக்க வேண்டி 'மார்ஃபைன்' ஊசி போட்டுக் கொண்டேன்!''

''அட பாவமே!''

''என் கணவருக்கு என்றைக்காவது என்னிடம் கனிவு ஏற்படாதா, அவர் மனம் மாறாதா என்றே புழுங்கிக் கொண்டிருந்தேன்.''

''ஒரே வீட்டில்தான் இருந்தீர்களா? பிரிந்து போய்விடவில்லையே?''

''பிரியவில்லை. குழந்தைகளுக்காகத்தான். மேலும், என் திருமணம் நிகழ்ந்து மூன்று வருடங்களுக்குப் பிறகு என் தாயார் இறந்து விட்டாள். தந்தையைக் கல்லூரியில் படிக்கும்போதே இழந்து விட்டிருந்தேன். நான் தனியாக வசிக்கத் தொடங்கினால் என் கணவரின் சந்தேகம் மேலும் வலுப்பட வழி ஏற்படுமல்லவா?''

''நர்ஸிங் ஹோமுக்குப் போய் வந்துகொண்டிருந்தீர்களா?''

''மார்ஃபைன் போட்டுக் கொள்ள ஆரம்பித்துச் சில மாதங்களுக்குள்ளேயே நான் அதற்கு அடிமையாகி விட்டேன். அந்த நிலையில் நான் பிறருக்கு மயக்க மருந்து கொடுப்பது அபாயகரமானது. எனவே நர்ஸிங் ஹோமுக்குப் போவதையே நிறுத்தி விட்டேன்.''

''முதல் தடவை நீங்கள் 'மார்ஃபைன்' செலுத்திக் கொண்டபோது எப்படிப்பட்ட உணர்ச்சி ஏற்பட்டது? அந்த மருந்து பற்றிக் கொஞ்சம் சொல்ல முடியுமா?''

''ஓப்பியம் (அபின்) என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அதிலிருந்து தயாரிக்கப்படுவதுதான் மார்ஃபைன். எட்டு முதல் பதினைந்து மில்லி கிராம் வரையில் மார்ஃபைன் சல்ஃபேட் ஊசி போட்டுக் கொள்ளும்போது ஓரளவு உற்சாகம் ஏற்படும். உடலுக்கும் இதமாக இருக்கும். கவலைகளை மறக்க வழி வகுக்கும். ஓரளவு சோம்பல் ஏற்படும். உழைப்புக்குக் குந்தகமாக இருக்கும். பசி, உடல் வலி இவற்றை உணராமல் இருக்க முடியும். தூக்கம் வரும். நாளடைவில் இது இல்லாமல் உயிர் வாழவே முடியாது! முகம், கழுத்து, மார்பின் மேல்புறம் இப்பகுதிகளில் சூடேறிச் சிவக்கும். உடலுக்குள் செலுத்தப்பட்ட மருந்தின் ஆற்றல் குறைந்து மறைந்தவுடன் அரிப்பு, தும்மல் ஏற்படும்; உடம்பெல்லாம் வியர்வை பெருகும்.''

''தொடர்ந்து நீண்ட காலம் உபயோகித்தால்....?''

''உடல் இளைக்கும். மனத்தில் எந்த எண்ணமும் நிலைபெறாது. புத்தியைப் பாதிக்கும். 'டோஸ்' அதிகமானால் வாந்தி வரும். அதாவது பதினைந்து மில்லிகிராமுக்கு மேல். கண்ணிலுள்ள கருமணி சுருங்கும். ஆழ்ந்த உறக்கம் ஏற்படுமாகையால் கனவுகள் தோன்றும். நீண்ட காலம் உபயோகித்தால் அறிவு பேதலித்து விடும். சுய நினைவோடு பணியாற்றுவதே முடியாமல் போய்விடும்.''

''ஹஷீஷ், மரிஹுவானா இவை...?''

''அவை கஞ்சா இனத்தைச் சேர்ந்தவை. பங்க் (Bhang) சரஸ், கஞ்சா – இவை கஞ்சாச் செடியிலிருந்து தயாரிக்கப்படுபவை. கஞ்சாப் பொருட்கள் உட்கொண்டவர்களில் சிலர் சிரித்துக் கொண்டே இருப்பார்கள். ஓயாது பேசிக் கொண்டே இருப்பர் சிலர். மனத்தில் பல தோற்றங்கள் (Hallucinations) ஏற்படும். அதிக அளவில் உட்கொண்டால் உயிருக்கு ஆபத்து.''

''இவ்வளவு போதைப் பொருட்களில் நீங்கள் மார்ஃபைனை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள் டாக்டர்?''

''மற்றப் போதைப் பொருட்களை விட அதைத் தேவையான அளவு கணக்காக உடலுக்குள் செலுத்திக் கொள்ள முடியும். மனக் கவலைகளை, சோர்வை மறக்கத் தேவையான அளவுமட்டுமே நான் உபயோகித்து வந்தேன். நாளடைவில் வீட்டுக்குள் முடங்கிக் கிடக்க ஆரம்பித்தேன். உடல் இளைத்தது. உடலைப் பற்றிய கவலையைத்தான் என்றோ மறந்து விட்டேனே? என் நிலைமை என் கணவரின் நெஞ்சைத் தொட ஆரம்பித்தது. அவரே எனக்குச் சிகிச்சைக்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார். மார்ஃபைன் பழக்கத்தைக் கைவிட்டு விடுவதாக என் கணவருக்கு நான் வாக்களித்தேன். ஆனால் அதற்காக நான் பட்ட பாடு! புத்தி தெளிந்த நிலையில் என் குழந்தைகளைப் பார்த்தபோது என் மனம் துவண்டது. என் செய்கையை எண்ணி வேதனைப் பட்டேன். என் கணவரின் மன நிலையும் மாறிவிட்டது. அவர் என்னிடம் கொண்ட சந்தேகம் ஆதாரமற்றது என்பதை அவரே உணர்ந்து விட்டார். இப்போது நான் மீண்டும் பழைய டாக்டர் ஆகிவிட்டேன். இன்னும் நர்ஸிங் ஹோமுக்குச் செல்ல ஆரம்பிக்கவில்லை. என் கணவர் போகச் சொல்கிறார். வீட்டிலேயே 'பிராக்டீஸ்' செய்து வருகிறேன். முன்பிருந்த வீட்டைக் காலி செய்து விட்டு இப்போது இங்கே வந்து இரண்டு வருடங்கள் ஆகின்றன. பழைய வீட்டிலேயே இருந்திருந்தால் என் பழைய நிலையை அறிந்த யார்தாம் என்னிடம் சிகிச்சைக்கு வரக் கூடும்?''

''உங்கள் நினைவுகளைக் கிளறி வேதனை அளித்ததற்காக மன்னிக்க வேண்டும்'' என்றேன்.

''பரவாயில்லை. எனக்கும் ஒரு விதத்தில் ஆறுதலாயிருக்கிறது. என் பெயரையும் என் கணவரின் பெயரையும் மட்டும் மாற்றி எழுதிவிடுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டார் டாக்டர் பிரியம்வதா கேசவன். அதன்படியே செய்திருக்கிறேன். பேட்டி: **-பாணன்**

# மின்னலடிக்கும் வெண்மைக்கே...ரின்








ரின், சோப் அல்ல இது. புத்தம் புதுமையான ஒரு சலவைச் சாதனம்—வில்லை வடிவிலே ஒரு டிடர்ஜெண்ட். சிக்கன மிக்கது ரின்; சோப்பைவிட மேலும் அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுத்திடும். திறந்த சோப்புப் பெட்டியிலே ஈரமுலர வைத்துக் கொண்டால் சிறந்த பலன் அளிக்கும் ரின். குடும்பத்திலுள்ள ஆடவரின், பெண்டிரின், குழந்தையரின்...யாவரின் துணிகளிலும் மின்சுடரின் வெண்மை பளிச்சிடவே: ரின்!

**சலவையோ யானையளவு!**

**சோப்பை விட அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுப்பது ரின்!**

லின்டாஸ்-RIN, 7-690 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.


இன்ஸ்பெக்டர் விக்ரம்
8


கைதியை அருகிலுள்ள மரத்தில் கொள்ளைக் காரர்கள் கட்டினர்.
நான் மிருகத்தையல்லவா கேட்டேன்? இவன் மனிதனுயிற்றே!


இவன் போலீஸுக்கு உதவும் குள்ளநரி! எங்களைக் காட்டிக் கொடுத்தவன்!
கருணை காட்டுங்கள்!


கருணை காட்டுமாறு கதறுகிறான் பாருங்கள் ?


உன்னால் எங்களில் நால்வர் உயிர் துறக்க நேர்ந்தது உனக்குத் தெரியுமா?


செய்வதையும் செய்துவிட்டு இப்போது கோழை யாட்டம் அழுகிறாய்! ராணி! சுடு இவனை !
குற்றமற்றவனை எப்படிச் சுடுவேன் ?




நீ அவனைச் சுடுகிறாயா, அல்லது உன்னை நான் சுட்டுவிடவா ?


கதாநாயகி தன் பலத்தை யெல்லாம் ஒன்று திரட்டிக்கொண்டு...
எல்லோரும் கைகளை உயர்த்துங்கள்!


வாங்கிருக்குச் சிரிப்பு !
அன்பே! என் ராணி! இது சினிமா அல்ல! நாங்கள் நிஜ கொள்ளைக்காரர்கள்!
துப்பாக்கியைக் கீழே போடுங்கள்! உம் சீக்கிரம்!
(தொடரும்)

# முருகன் அருளும் மிருகங்களிடம் அன்பும்

வீட்டிலும் சரி, காரியாலயத்திலும் சரி, எங்க வீட்டுப் பிரசிடெண்ட் பார்வை படும் இடமெல்லாம் முருகனின் உருவம் சுவரில் பதிந்திருக்கும். அப்படி இல்லாத வெளி இடங்களில் அவர் உதடுகளில் அந்த முருகன் நாமம் ஒலித்து நிற்கும். அந்த முருகன் அடிமையான சாண்டோ எம். எம். ஏ. சின்னப்பா தேவர்தான் என் தந்தை.

ஆடம்பரம் என்பது அவரை அணுகாத விஷயம். உடம்பில் சாதாரண சட்டையைக்கூட எப்போதாவது அபூர்வமாகத்தான் அவர் போடுவார். ஆகார விஷயங்களில் ஆர்வம் அவ்வளவாகக் கிடையாது. அன்றாடச் சாப்பாட்டில் கீரை வகைகள் கலந்திருந்தால் போதும். ஆனந்தம் அவரை எந்த விநாடியிலும் ஆக்கிரமித்துக் கொள்ளும். அந்த முருகனை நினைத்துக் கொண்டாலோ, அவன் திருக் கோவில்களைப் பற்றி யாரும் பேசினாலோ ஆனந்த பரவசத்தில் அவர் ஆழ்ந்து விடுவார். ஆரம்ப நாட்களில் மிகவும் கஷ்டமான வாழ்க்கை நடத்தியதை அவர் மறைப்பதோ மறப்பதோ இல்லை. அதன் விளைவாக இப்போது இவர் பிறர் கஷ்டப் படுவதைக் காணப் பொறுக்க மாட்டார்!

ஆறு ரூபாய் சம்பளம் வாங்கிய காலத்தில் இவர், ''யாருடா அந்த முருகன்?... எதற்குடா நீங்கள் எல்லாம் அவனைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொள்றீங்க?'' என்று எடுத்தெறிந்து நாத்திக வாதம் பேசிக் கொண்டிருந்தவர்தான். பத்து ரூபாய் கடன் ஏற்படுத்தித் தன் பக்தனாக மாற்றிக் கொண்டான் முருகன்.

இவர் கடன் பட்டிருந்த கிழவி ஒருத்தி ஒரு நாள் இவர் கழுத்தில் துண்டைச் சுற்றி இழுத்துப் பத்து ரூபாய் காசைத் திருப்பிக் கொடுக்க வக்கில்லாதவன் என்ற வகையில் கண்டபடி பேசிவிட்டாளாம். இவர் அவமானம் தாங்காமல் கால் போனவாக்கில் நடந்திருக்கிறார். காலில் ஒரு யானை மார்க் சிகரெட் பெட்டி இடறியிருக்கிறது. கோபத்தில் அதை மேலும் எத்திக் கொண்டே போயிருக்கிறார். அந்தக் காலத்தில் அவர் புகை பிடிப்பது வழக்கம். அந்தப் பெட்டியில் ஏதாவது சிகரெட் இருக்காதா என்ற சபலம். கடைசியில் குனிந்து அந்தப் பெட்டியை எடுத்துத் திறந்திருக்கிறார். அந்தப் பெட்டியில் மூன்று சிகரெட்டுகளும் ஒரு பத்து ரூபாய் நோட்டும் இருந்திருக்கின்றன. அந்த ரூபாய் நோட்டை எடுத்துக் கொண்டு ஓட்டமாய் வந்து கடன்காரக் கிழவியிடம் நீட்டினார். ''எங்கே திருடினாய்?'' என்றுதான் கிழவி கேட்டாளாம்! ரூபாய் கிடைத்த விதத்தைச் சொல்லி விட்டுக் கிளம்பிய என் தகப்பனாருக்கு ஒரு திடீர் யோசனை. 'ஒரு வேளை அந்த முருகன் தான் உதவி செய்தானோ?' என்ற எண்ணம். அவ்வளவுதான்! இதுவரையில் மருதமலைக் கோவிலுக்கு வழி எது என்று தெரிந்து கொள்ளாத அவர், அன்று நள்ளிரவில் இரண்டு பேர்களைத் துணைக்கு அழைத்துக் கொண்டு கிளம்பி விட்டார். வழி தவறித் திண்டாடவும் திண்டாடினார்.





அன்றிலிருந்து கையில் கிடைத்த காசெல்லாம் கற்பூரமும், தேங்காய், பழமு

மாக மாறிக் கொண்டிருந்தன. என் பாட்டியார், இவரை, 'வீட்டுக்குக் காசு கொண்டு வந்தால் சாப்பிட வா! இல்லாவிட்டால் நுழையாதே இங்கே!' என்று சொல்லுமளவுக்கு முருக பக்தி வளர்ந்து விட்டது!

இவருடைய நண்பர், குரு, வழிகாட்டியாக விளங்குபவர் கிருபானந்த வாரியார் அவர்கள். ரத்னகிரி சுவாமியாரிடமும் சமீப காலமாக இவருக்கு நிறைய ஈடுபாடு.

கல்யாணமாகி ஆறு வருட காலத்துக்குள் இவருக்கு இரண்டு பெண் குழந்தைகள். கொஞ்சம் அவசரப்பட்டுப் பிறந்து தங்காமல் போய் விட்ட காரணத்தால் இவர் மனம் உடைந்து போனார். ஆண்டவனை நினைத்துப் பழனிக்குப் போனார்.

அடுத்த ஆண்டிலேயே என் அண்ணன் பிறந்துவிட்டான். அந்தக் குழந்தைக்குத் தண்டாயுதபாணி என்று தான் இவர் பெயர் சூட்டினார்.

என் பாட்டியார் முடிந்த வரை கெஞ்சினாராம். ''இது மூணாவது குழந்தை. இதாவது தங்கியிருக்க வேண்டும். காதையாவது மூக்கையாவது குத்தி, குப்புன்னுவது பிச்சை என்றுவது பெயர் வைக்க வேண்டும்'' என்றாராம். என் தகப்பனார் கண்டிப்பாக மறுத்து விட்டாராம். ''முடியாது! அப்படிச் செய்தால் அந்த முருகனையே நான் அவமானப்படுத்திய மாதிரி ஆகிவிடும்'' என்று ஓங்கியடித்து விட்டாராம்.

என் தந்தையாரைப் பற்றி நான் கூறும்போது முருகனுக்கு அடுத்தபடியாக மிருகங்களிடம் இவருக்குள்ள அன்பைப் பற்றித்தான் நான் கூறுவேன் என்பது உங்களுக்கே தெரியும்!

உதகமண்டலத்தை அடுத்துள்ள முதுமலைக் காடுகளின் ஓரத்தில் வெளிப்புறக் காட்சிகள் படப்பிடிப்புக்கு இவர் ஏற்பாடு செய்திருந்தார். மறுநாள் படப் பிடிப்பில் கலந்துகொள்ள வேண்டிய சிங்கமும், அதைப் பழக்குபவரும் இருபது மைல்களுக்கப்பால் உள்ள கிராமத்தில் இருக்க ஏற்பாடு. படப்பிடிப்பின்போது அவர் சிங்கத்தை அழைத்து வர வேண்டும். இரண்டு நாட்களில் இந்தக் காட்சி படம் எடுக்கப்பட்டு நடிகர்கள் கிளம்ப வேண்டும் என்று திட்டம்.

முதல் நாள் பிற்பகலில் சிங்கத்தைப் பழக்குபவர், துயரச் செய்தியுடன் என் தகப்பனாரிடம் வந்தார். அந்தச் சிங்கம் திடீரென்று செத்துப் போய்விட்டது! இவருக்கு ஒன்றுமே ஓடவில்லை. அதை நம்பித்தானே அத்தனை ஏற்பாடுகளும் நடந்திருக்கின்றன. வந்தவரையும் அழைத்துக் கொண்டு ஜீப்பில் அந்த அபிமான சிங்கத்தின் உடலைப் பார்க்க வந்துவிட்டார். இவருக்குத் தாங்க முடியாத துக்கம்.

திரும்பி வரும்போது மாலை பொழுது சாய்ந்து விட்டது. இவர்கள் வந்து கொண்டிருக்கும் ஜீப்பை ஓர் ஆசாமி பதற்றத்துடன் நிறுத்தி, ''ஐயா! பாதை நடுவில் ஒரு பர்லாங் கிற்கப்பால் ஒத்தை யானை மூர்க்கமாக நின்று கொண்டிருக்கிறது. நீங்கள் எச்சரிக்கையாகப் போக வேண்டும்'' என்று சொல்லிவிட்டுப் போனான். 'முருகா' என்று பிரார்த்தித்து விட்டு இவர் ஜீப்பை நிறுத்தச் சொல்லி விட்டார்.

ஒரு மணி நேரத்துக்கு மேலாக அங்கேயே காத்திருந்து விட்டு ஜீப்பைக் கிளப்பச் சொன்னார். வழியில் எங்கும் யானை நின்ற சுவடே இல்லை. ஜீப்பில் கூட வந்த ஒருவர், ''நம்மை வேண்டுமென்றே அந்த ஆசாமி பயமுறுத்தியிருக்கிறான். யானை வந்தே இருக்காது! நாம்தான் நடுங்கிப் போய், 'முருகா, முருகா' என்று உட்கார்ந்து விட்டோம்'' என்று சொன்னார். என் தகப்பனார் கூட அப்படி இருக்குமோ என்று நம்பி விட்டார்.

ஆனால் அடுத்த மைலில் அந்த ஜீப் ஒரு வளைவில் திரும்பியபோது அந்த யானை சாலை மேட்டுக்கு அப்பால் உள்ள மரத்தை வளைத்து இழுத்துக் கொண்டிருந்தது. அந்த யானை ஒரு கணம் இந்த ஜீப்பைப் பார்த்திருந்தால் வழி மறித்திருக்கும். நல்ல வேளை பார்க்க வில்லை. இவர்கள்தான் அதைப் பார்த்தார்கள். ''ஆஹா! முருகனை அனாவசியமாகக் கூப்பிட்டதாக நினைத்தோமே!'' என்று மனம் உருகினாராம்.

இவருடைய அதிருஷ்டம் மறுநாளே பக்கத்தில் முகாமிட்டிருந்த ஒரு சர்க்கஸிலிருந்து பழகிய சிங்கம் கிடைத்தது. குறிப்பிட்ட நேரத்தில் அந்த வெளியூர்ப் படப் பிடிப்பும் முடிந்தது.

குறித்த காலத்துக்குள் எடுத்துக் கொண்ட வேலை முடிய வேண்டும் என்று குழந்தைபோல் பிடிவாதம் பிடிப்பார் இவர். ஒத்துழைப்பவர்களிடம் அன்பைச் சொரிவார்! ஒத்துப் போகாதவர்களிடமிருந்து இவர் ஒதுங்கிப் போவார்!

பேட்டி :
**கோமதிஸ்வாமிநாதன்**



*பிரசிடெண்ட்:* **திரு எம். எம். ஏ. சின்னப்ப தேவர்**
*பேட்டியளித்தவர்:* **அன்னாரின் புதல்வி திருமதி லட்சுமி**



# வீட்டுக்கு வந்த மருமகள்

பல கதா நாயக-நாயகிகளையும், மற்றும் பல பாத்திரங்களையும் சேர்த்துப் படம் தயாரிப்பது இப்போதைய ஃபாஷன்; இத்துடன் பல படங்களின் சாயல்களைச் சேர்ப்பதும் தமிழ்த் திரையுலக நியதியாகி வருகிறது.

பணத் திமிரும் வறட்டுக் கௌரவமும் கொண்ட ஒரு பணக்கார மாது கதையையும் கதாபாத்திரங்களையும் தன் இஷ்டத்துக்கு ஆட்டி வைக்கிறாள்.

இந்தப் பாத்திரத்தை ஜி. வரலக்ஷ்மி ஏற்றிருப்பது மிக மிகப் பொருத்தமாகும். நடை உடை, பாவனை, பேச்சு, அவர் அணிந்திருக்கும் மூக்குக் கண்ணாடி — எல்லாமே அந்தஸ்தும் சுய கௌரவமும் பாராட்டி அற்புதமாக நடித்திருக்கின்றன. படத்தின் கௌரவத்தையே அவர் நடிப்பு காப்பாற்றித் தந்திருக்கிறது. சபாஷ் வரலக்ஷ்மி!

ஏ. வி. எம். ராஜன் அடக்கத்துக்கும், பொறுமைக்கும் உருவமாக வந்து, வீட்டை விட்டு வெளியேறி, பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருந்து கடைசிக் காட்சியில் திரைக் கதையின் சிக்கலை, சொல்லிவைத்த மாதிரி தீர்த்து வைக்கிறார். மனநிறைவைத் தரும் நல்ல நடிப்பு!

மிகச் சுலபமாகப் பணக்காரப் பெண்ணைக் காதலிக்கவும், காதலித்தவளையே சிக்கல் எதுவும் இல்லாமல் கைப்பிடிக்கவும் ரவிச்சந்திரனுக்கு வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. கிடைத்த வாய்ப்பைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு காதலியுடன் ஆடி ஓடி, டூயட் பாடி, அதிகமாக அலட்டிக்கொள்ளாமல் நடித்திருக்கிறார்.

மனைவிக்கு அடங்கிய கணவனாக வரும் 'சோ' இருக்கும்போது சிரித்து மகிழத் தனியாக நகைச்சுவைக் காட்சிகள் வேறு தேவையில்லைதானே! காற்றுடன் நெருப்புச் சேர்ந்த மாதிரி 'சோ'வுடன் மனோரமாவும் சேர்ந்து நகைச்சுவை விருந்தளிக்கிறார். இடைவேளை வரையில் ஒருவாறு விறுவிறுப்புடன் போய்க் கொண்டிருந்த திரைக் கதை அதற்குப் பிறகு நூல் அறுந்த காற்றாடி மாதிரி அலைப்புண்டு அவதிப்படத் தொடங்க விட்டது. லதா சேரிவாழ் கும்பலுடன் தோன்றி, 'மதராஸ் பாஷை'யில் பேசிப் பணக்கார மாதைப் பழி வாங்க ஆரம்பிக்கிறார். இது அசிங்கமான ஆடல் பாடல்களுடன் ஒரே அறுவையாயிருக்கிறது. மிக மிக மட்டமான இந்தக் காட்சிகளைச் சேர்க்க எப்படித்தான் மனம் வந்ததோ! (திமிர் பிடித்த பணக்கார அம்மாளுக்குப் புத்தி கற்பிக்கும் அட்டகாச ஆர்ப்பாட்ட முறை பழைய ''பணமா பாசமா?'' படத்தில் வந்தது தான்! ரசிகப் பெருமக்களின் ஞாபக மறதியில்தான் எத்தனை நம்பிக்கை படத் தயாரிப்பாளர்களுக்கு!)

நிர்மலாவும் முத்துராமனும் காதலித்துச் சிலகாலம் பிரிந்திருந்து கடைசியில் ஒன்று சேருகின்றனர். இருவர் நடிப்பும் நன்றாயிருக்கிறது. வி. எஸ். ராகவனும், எம். என். ராஜமும் தங்கள் இயல்பான நடிப்பினால் படத்துக்கே களையூட்டுகின்றனர்.

பாடல்களைப் பொருட்படுத்தாமல் மன்னித்து விட்டுவிடுவது நல்லது! இளைஞர் ஆர். விட்டலின் டைரக்ஷன் குழப்பம் இல்லாமல் சிறப்பாக இருக்கிறது.

திரையுலகக் கதைகளில் மிக மிக மலிவான சரக்கு மன்னிப்பு! இந்தப் படத்தில் கடைசிக் காட்சி ஒரே மன்னிப்பு மயம்!

ரசிகர்கள் கடைசியாக என்னையும் மன்னிக்க வேண்டும். இந்தப் படத்துக்கும் ஒரு விமரிசனம் எழுதியிருக்கிறேனே! —காந்தன்

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# சில்விக்ரீட் உபயோகித்து

## உங்கள் இல்லத்தை அலங்கரியுங்கள்

## ஏசிசியின் வெள்ளை சிமெண்டு.

ஒரு கருத்து தெரிவியுங்கள். சுவரை அழகுப்படுத்தல். எழில் கொஞ்சும் பூத்தொட்டி டிசைன் அமைத்தல். உங்கள் வரவேற்பு அறையில் டெர்ரசோ தளவரிசை இடல் மற்றும் கான்க்ரீட் ஜாலி வேலை செய்தல். நீங்கள் விரும்பும் எவ்வித வண்ண வேலைக்கும் உகந்த ஏசிசி யின் சில்விக்ரீட் வெள்ளை சிமெண்டு.

உங்களுடைய தேவைகளுக்கு அணுகவும் :
அருகமைந்த சிமெண்ட் மார்க்கெட்டிங் டிவிஷன் ஆஃப்
தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்.
அல்லது அவர்களுடைய விநியோகஸ்தர்கள்.

**தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்**

ஸ்லேஸெம், கான்க்ரீட் முதலிய தயாரிப்புகளில் உபயோகப்படுத்தப்படும் மூலப்பொருள் சில்விக்ரீட்.



rlaa. ACC 2203 A.TAM.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)